வள்ளுவர்

# தமிழ் வாசகம்

ஆறும் வகுப்பிற்கு





நூற்பதிப்புக் கழகம்
ஈரோடு

# வள்ளுவர் தமிழ் வாசகம்

## ஆறாம் வகுப்பு

ஆசிரியர்கள் :

**வித்துவான் எஸ். நாகராசன், M.A., B.T.**
தலைமைத் தமிழாசிரியர்,
தூய மேரி பெண்டிர் போதனா முறை உயர்நிலைப் பள்ளி,
சேலம்.

**புலவர் நா. சுந்தரராசனார்,**
தலைமைத் தமிழாசிரியர்
தூய மைக்கேல் உயர்நிலைப் பள்ளி, கோவை.

**சிவலிங்க நூற்பதிப்புக் கழகம்,**
**ஈரோடு.**

 1957 [விலை நயே பைசே 75
(அணா 12)

முதற் பதிப்பு அக்டோபர் 1955
திருத்திய இரண்டாம் பதிப்பு மே 1956
,, மூன்றும் பதிப்பு ஜூன் 1957



**Approved for class use by the Madras Text Book Committee, Madras. Vide Fort St. George Gazette Supplement to part I-B (14-B) dated 4—4—1956 Page No. 4 for class use.**

Paper used : 24 lbs. Double
Crown white printing




ராஜன் எலக்டிரிக் பிரஸ், சென்னை-1.

# முன்னுரை

"வள்ளுவர் தமிழ் வாசகம்" என்று பெயரிடப்பட்டுள்ள இப்பாட நூல் வரிசை அரசியலாரின் பாட வியலுக்கு ஏற்ப எழுதப்பட்டுள்ளது. மாணவருலகம் மகிழ்ந்து போற்றும் வண்ணம் ஓவியங்களும் பாடங்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. கலைச் செல்வம் கவினுற விளங்கும் இந்நூல்கள், பல்லாண்டு மாணவர்க்குக் கற்பித்து வந்த பயிற்சியால் உருவானவை. மாணவரது பொது அறிவை வளர்த்தற்கு இன்றியமையாததாய் இருப்பது உரைநடை. இந்த நோக்கத்தினை அடிப்படையாகக் கொண்டே வரையப்பட்டுள்ள இத்தொடர் நூல்களில் பாட வியலுக்கேற்பப் பலவகைப் பாடங்கள், பாடக் கேள்விகள், பயிற்சிகள், அரும்பதங்கள் ஆகியன தொகுக்கப்பட்டுள்ளன. இவை மாணவர்களது சொற்களஞ்சியத்தைப் பெருக்கும் தன்மை வாய்ந்தன.

செய்யுள் கலை நலம் அமைந்தது; மாணவரது கருத்தை ஈர்ப்பது; இயற்கை எழிலைத் தெரிவித்து இன்பம் பயப்பது. கவியின் கருத்தை யறிந்து, கவி நலம் காணக் கற்பிக்கப்படுமாயின், அது கல்லா மக்களின் உள்ளத்தையும் கவினுறப் பிணிக்கும். இக்கருத்தை மேற்கொண்டே கற்பிக்கத் தக்க செய்யுள்கள் பாடங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடத்திற்கும் இறுதியில் விதி வரு முறையில் இலக்கணப் பாடங்கள், அதற்குப் பின் பயிற்சிகள் ஆகியன தரப்பட்டுள்ளன.

தக்க முறையில் ஒழுங்கு செய்து வனப்போடு இந்நூல் வரிசை வெளிவர உதவி புரிந்த சென்னை, C. A. H. இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் உயர்திரு. வித்துவான் பு. செல்வராசனர் அவர்களுக்கு எம் மனமார்ந்த நன்றி.

ஈரோடு
1-10-'55

ஆசிரியர்கள்

# உள்ளுறை

---

செய்யுட் பகுதி

# தேசிய கீதம்

---

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

## நாட்டு வணக்கம்

---

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி யடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;

யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது;

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன;

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு வெற்றி, வெற்றி, வெற்றி.

# 1. நமது தாய்மொழி

நம் தாயே நமக்கு முதல் கடவுளாவாள். இதனு லேயே 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று நம் ஆன்ருேர் கூறினர். தமது தாய் நம்மைச் சீராட்டிப் பாலூட்டித் தாலாட்டி வளர்த்தாள். அவள் நம்மிடம் பேசிய மொழியே தாய் மொழியாகும்.

தாயே நமது முதல் ஆசிரியை. அவளே தன் குழந்தைக்குப் பற்பல சொற்களைப் பேசக் கற்றுக் கொடுக்கிருள்; கற்றுக் கொடுத்தவற்றைக் கேட்டு மகிழ்கிருள்; தன் குழந்தை பேசுவதுபோல எவ ருமே பேசார் என்று கூறிக் களிப்பெய்துகிருள். எனவே, நாம் நமது தாயை மறக்கலாமா? மறக்க லாகாது. அதுபோலவே அவள் நமக்கு முதன் முதலில் கற்பித்த மொழியையும் மறக்கலாகாது.

நாம் தமிழ் நாட்டில் வாழ்கிருேம்; நமது தாய் நமக்குத் தமிழையே முதன்மையாகக் கற்பித்தாள். எனவே, நமது தாய் மொழி தமிழ் மொழியாகும். தெலுங்கு நாட்டினரின் தாய் மொழி தெலுங்கு. கன் னட நாட்டினரின் தாய் மொழி கன்னடம். இது போலவே அந்தந்த நாட்டினரின் தாய் மொழி அந் தந்த நாட்டில் வழங்கும் மொழியாகவே இருக்கும். தமிழ் நாட்டில் பிறந்த ஒரு சிலருடைய தாய் மொழி தமிழாக இராது. ஏனெனில், அவர்களின் முன்னோர் கள் வெவ்வேறு மொழிகளைப் பேசும் நாடுகளி லிருந்து வந்தவர்களாவார்கள்.

# சங்ககாலத் தமிழகம்

வட பெண்ணை
தொண்டை நாடு
வேங்கடம்
பாலாறு
காஞ்சிபுரம்
கடல்மல்லை
மரக்காணம்
நடுநாடு
தகடூர்
தென்பெண்ணை
புதுசேரி
(பொதுசா)
திருக்கோவலூர்
காவிரி
கொங்கு நாடு
கொல்லிமலை
சோழநாடு
காவிரிப் பூம்பட்டினம்
காவிரி
உறையூர்
ஆவூர்
தொண்டி
முதிரமலை
நாகப்பட்டினம்
வஞ்சி
முசிறி
கோடை மலை
பழநிமலை
பிரான்மலை (பறம்பு மலை)
மதுரை
சேர நாடு
பாண்டி நாடு
பிசுக்குடி
(பிசிர்)
நள்ளிநாடு
கொற்கை
பொதியமலை
நாஞ்சில்மலை
கன்னிமுனை
அரபிக் கடல்
வங்காளக் குடா
இலங்கை

◆ வள்ளல்கள் ஆண்ட சிறிய நாடு..
■ தலை நகரம் . . . . . . . . .
○ துறைமுகப் பட்டினம் . . . .
● புலவர்கள் வாழ்ந்த ஊர் . . .

தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்பது பொருள். தமிழ் மொழி மிகவும் இனிமை உடைய மொழி. இது சிறந்த நூல்களைப் பெற்று இருக்கின்றது. திருவள்ளுவர், கம்பர், இளங்கோவடிகள் போன்ற மிகச் சிறந்த கவிகளைப் பெற்றது நம் தமிழ் மொழி. இந்தப் புலவர்களால் நம் நாடு உயரிய நாடாகத் திகழ்கிறது என்று கூறலாம்.

தமிழ் மொழி பேசப்படும் இடத்தைத் 'தமிழ் கூறு நல்லுலகம்' என்றனர் நம் பெரியோர். 'தமிழ் கூறு நல்லுலகம்' என்றது தமிழ் நாட்டையே யாகும். சங்க காலத் தமிழ் நாட்டின் வடக்கெல்லை வடவேங்கடம் என்னும் திருப்பதிமலை; ஆனால் இன்று இவ்வெல்லை ஆந்திர நாட்டில் சேர்ந்து விட்டது. தெற்கெல்லை கன்னியா குமரி; கிழக்கெல்லை யாக இருப்பது வங்காளக் குடாக்கடல்; மேற்கெல்லை யாகக் குடகு நாடும், மலையாள நாடும் உள்ளன. இந்த எல்லைகளுக்குள் இருக்கும் நிலப்பரப்பே தமிழ் மொழி பேசும் தமிழ் நாடாகும்.

தமிழ் மொழி மிகவும் தொன்மையான மொழி. கணக்கிட்டுக் கூற முடியாத காலத்திற்கு முன்னதாகவே தோன்றி வளர்ந்து சிறந்துள்ள மொழியாகும். அகத்தியம், தொல்காப்பியம் என்பனபோன்ற இலக்கண நூல்களும், சங்க நூல்கள் போன்ற இலக்கிய நூல்களும் தமிழ் மொழியில் உள்ளன. இவை பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே எழுதப்பட்டவை யாகும்.

பண்டைக் காலத்தில் தமிழரசர்கள் மூவர் இருந்தனர். அவர்கள் சேர சோழ பாண்டியர்களா

வார்கள். அவர்களும், மற்றும் தமிழ் நாட்டில் இருந்த பிற வள்ளல்களும் தமிழ் மொழியை ஆத ரித்தனர்; தமிழ்ப் புலவர்களையும் போற்றி வந்தனர். பாண்டிய நாட்டிலிருந்த மூன்று சங்கங்களும் தமிழ் மொழிக்கு உரிய பல ஆக்கங்களை அளித்து வந்தன. இதனாலேயே நம் தாய் மொழி பிற மொழிகளைப் போலன்றி உயரிய மொழியாக இன்றும் போற்றப் பட்டு வருகின்றது.

எனவே, தமிழ் நாட்டில் பிறந்த நீங்கள் தாய் மொழியினிடம் பற்றுக் கொள்ளுதல் வேண்டும். அதனைப் போற்றுதல் வேண்டும். போற்றுவது எப் படி? தாய் மொழியைப் பிழையில்லாமல் பேசுதல் வேண்டும்; எழுதுதல் வேண்டும். பெரியவர்களான பிறகு நம் முன்னோர் நமக்காக எழுதிவைத்திருக்கும் நூல்களைக் கற்றுக் கொள்ளவேண்டும். தமிழ்ப் புல வர்களாக விளங்க வேண்டும். அப்படிச் செய்ப வனே தாயை மறவாதவன்; அவன் தாய் மொழி யையும் போற்றுவான் என்பது திண்ணம்.

"வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்நாடு!"

## அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| ஆன்றோர் | அந்தந்த | நல்லுலகம் | நூற்றாண்டு |
| சீராட்டி | வெவ்வேறு | நிலப்பரப்பு | ஆக்கம் |
| களிப்பு | இனிமை | தொன்மை | அளித்து |
| முதன்முதலாக | உயரிய | ஏறக்குறைய | பற்று |
| தெலுங்கு | திகழ்கிறது | இலக்கணம் | முன்னோர் |
| கன்னடம் | தமிழ்கூறு | இலக்கியம் | திண்ணம் |

## கேள்விகள்

1. தாய்மொழி என்பது யாது?
2. தாய் நமக்குச் செய்தவை யாவை?
3. தாயை ஏன் மறக்கலாகாது?
4. தமிழ் நாட்டில் உள்ள ஒரு சிலரின் தாய்மொழி தமிழன்று—ஏன்?
5. 'தமிழ்' என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?
6. நம் நாடு உயரிய நாடாகத் திகழ்வதேன்?
7. தமிழ் நாட்டின் எல்லைகளைக் கூறுக.
8. தமிழ் மொழி தொன்மையான மொழி என்பது எப்படி?
9. தமிழ் மொழியை ஆதரித்தவர் யாவர்?
10. தமிழ் மாணவர்கள் கடமை யாது?

## பயிற்சி

1. தாயைக் குறிக்கும் மற்றொரு சொல் யாது?
2. தாய் தந்தை ஆகிய இருவரையும் குறிக்கும் சொல் யாது?
3. தற்காலத்தில் வாழும் புலவர் இருவர் பெயர்களைக் கூறுக.
4. திருவள்ளுவர், கம்பர், இளங்கோவடிகள் ஆகியோர் இயற்றிய நூல்களை ஆசிரியரைக் கேட்டுத் தெரிந்து கொள்க.
5. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக: களிப்பு, வெவ்வேறு, அந்தந்த.
6. எதிர்மொழிகள் கூறு: பற்பல, உயரிய, முன்னர்.

## இலக்கணம்

தாய் சொற்களைப் பேசக் கற்றுக் கொடுக்கிருள்—இது ஒரு வாக்கியம். இந்த வாக்கியத்தை முடிப்பது **கற்றுக் கொடுக்கிருள்** என்பதாகும். இதுவே இவ்வாக்கியத்தின் **பயனிலை** ஆகும். **ஒரு வாக்கியத்தை முடிக்க உதவியாய் இருப்பது பயனிலை.**

பின்வரும் வாக்கியங்களின் பயனிலைகளைக் கண்டுபிடி :

1. ஒரு சிலருடைய தாய் மொழி தமிழாக இராது.
2. தமிழ் மொழி சிறந்த நூல்களைப் பெற்று இருக்கிறது.
3. அரசர்கள் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தனர்.

கோடிட்ட இடத்தில் தக்க பயனிலை அமைக்க :

1. சங்க நூல்கள் போன்ற இலக்கிய நூல்கள் தமிழ் மொழியில்———.
2. நீங்கள் தமிழினிடம் பற்று———.
3. இவை பல நூற்ருண்டுகளுக்கு முன்———.

---

## 2. தாய் மொழி வாழ்த்து

(1) வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே.

(2) ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே.

(3) எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே.

(4) தொல்லை வினைதரு தொல்லை அகன்று
சுடர்க தமிழ்நாடே.

(5) வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழ்க தமிழ்மொழியே.

—பாரதியார்.

### அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| நிரந்தரம் | என்றென்றும் | வைப்பு | சுடர்க |
| வாழிய | தொல்லைவினை | இசைகொண்டு | அகன்று |

### கேள்விகள்

1. தமிழ் மொழி எப்படி வாழ வேண்டும் ?
2. தமிழ் நாடு எப்படி விளங்க வேண்டும் ?

பொருள் கூறு :— நிரந்தரம், வைப்பு, இசை, தொல்லை வினை, சுடர்க.

## பயிற்சி

1. இது பாரதியாரின் தமிழ் மொழி வாழ்த்து. இன்னும் பல புலவர்கள் தமிழ் மொழியைப் பற்றிப் பாடியுள்ளனர். இது போன்ற இன்னுமொரு பாடலைப் படித்துக் கொள்க.

2. பாரதியாரைப் பற்றிப் படி. அவரது தமிழ் மொழி அன்பைப் பற்றி 5 வாக்கியங்கள் எழுதுக.

3. இந்தச் செய்யுளை இசையோடு பாடிப் பழகுக.

4. இதனை உரைநடையாக எழுதுக.

---

## 3. கவரி வீசிய காவலன்

முடியுடை மூவேந்தர்களுள் ஒருவனுன இரும்பொறை என்ற சேர மன்னன் ஒரு காலத்தில் சேர நாட்டை ஆண்டுவந்தான். அவன் நீதி தவருத நேர்மையாளன். தமிழினிடத்தும் தமிழ்ப் புலவர் களிடத்தும் நீங்கா அன்பு கொண்டவன். தன்னிடம் வரும் தமிழ்ப் புலவர்களுக்கு வரையாது கொடுக்கும் வள்ளலாக விளங்கினுன்.

அவன் காலத்தில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர் மோசிகீரனுர் என்பவர். அவர் இரும்பொறை யைக் காணவேண்டும் என்னும் பேராவலால் நீண்ட தூரத்திலிருந்து வந்தார். அவர் வெயிலால் களைத் துச் சோர்வுற்றிருந்தார். புலவர் அரசனைக் காண நேராகக் கொலுமண்டபம் சென்றுர். அவர் அங்கே அவனைக் காணவில்லை. அங்கு அவருக்குக் காவலன் சென்றிருக்கும் இடத்தைக் கூறுபவரும் இல்லை.

புலவருக்கோ களைப்பும் சோர்வும் மிகுந்து இருந்தன. வேறிடம் செல்ல இயலாதவராக அங்கும் இங்கும் நோக்கினுர்; கொலுமண்டபத்தின் ஒரு புறத்தே ஒரு கட்டில் இருக்கக் கண்டார். கட்டில் நன்ருக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் மேல் மலர்களாலான ஒரு தூய மெத்தை விரிக்கப்பட் டிருந்தது. புலவர் அருகில் சென்றுர். அதைத் தம் கைகளால் தடவினுர். அதன் வனப்பைத் தம்முள் வியந்த வண்ணம் அதன்மேல் ஏறி அமர்ந்தார்; சற்றுச் சாய்ந்தார். அவ்வளவு தான்; அவரது களைப்பு, படுக்கையின் மென்மை ஆகிய யாவும் சேர்ந்து அவருக்கு உறக்கத்தைக் கொடுத்து விட்டன.

புலவர் படுத்த கட்டில் முரசு வைக்கப்படும் கட்டில். அது மிகவும் தூய்மை உடையதாகக் கருதப்பட்டது. அதன் மேல் அரசனது முரசு வைக்கப்பெறும். முரசு என்பது அரசனது வெற்றிக்கு அறிகுறியாக அடிக்கப்படும் ஒரு பெரிய தோற்கருவியாகும். முரசு வைக்கப் பெறும் அந்தக் கட்டிலில் எவரும் ஏறி இருக்கக்கூடாது என்பது வேந்தனின் கட்டளே. அங்ஙனம் ஏறுபவர்கள் அரசனது கடுமையான தண்டனேக்கு ஆளாக நேரிடும்.

புலவர் மோசிகீரனுருக்கு அது முரசு கட்டில் என்பது தெரியாது. மேலும், அரசனுடைய கட்டளேயையும் அவர் அறியார். எனவே, அவர் தம் களேப்பின் மிகுதியால் அதில் நன்ருகத் துயின்றுகொண்டிருந்தார். அப்போது அரசன் இரும்பொறை அப்பக்கம் வந்தான். வந்தவன் யாரோ ஒருவர் முரசு கட்டிலில் உறங்கிக்கொண்டிருந்ததைக் கண்டான் ; சினங்கொண்டு தன் வாளே உறையிலிருந்து உருவினுன் ; 'எவரும் ஏருத தூய்மையான கட்டிலில் உறங்குபவனே என் வாளுக்கு இரையாக்குவேன்' என்று எண்ணிய வண்ணம் முரசு கட்டிலின் அருகே சென்ருன்.

சென்றவன், முரசு கட்டிலில் உறங்குபவர் ஒரு தமிழ்ப் புலவர் என்பதை உணர்ந்தான். உணர்ந்ததும் தன் கையில் இருந்த வாளே உறைக்குள் இட்டான். சினம் தணிய, புலவர்பால் அன்பு கொண்டு உள்ளம் உருகினுன். அருகிலிருந்த கவரியை எடுத்துப் புலவருக்கு இனிய காற்றுப்படும் வண்ணம் வீசினுன். இனிய காற்றுப் படப்படப்

புலவர் அயர்வு நீங்கிக் கண் விழித்தார் ; காவலனைக் கண்டார் ; திடுக்கிட்டுக் கீழே குதித்தார் ; தாம் செய்த பிழையை அறிந்து வருந்தினர்.

" அரசே ! ஒருவரும் ஏருத புனிதமான கட்டிலில் ஏறித் துயின்ற என்னை, உன் வாளால் வெட்டி இருக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் நீ, செங்கோல் பிடித்த கையினுல் கவரி பிடித்துக்



காற்று வர வீசினுய். உன் பெருமையை நான் எப்படிப் புகழ்வேன்.! இங்ஙனம் நீ செய்தது உன் தமிழ் அன்பையே காட்டுகிறது" என்று அவனைப் புகழ்ந்து பாடினர்.

அரசன் இரும்பொறை புலவரின் வாழ்த்துரையைப் பெரிதும் வியந்தான். அவருக்குப் பல பரிசுகள் நல்கினன். அவரோடு ஒரு சில நாட்கள் அளவளாவி

ஞன். பின்னர் மோசிகீரனுர் அரசன் இரும்பொறை யிடம் பிரியாவிடை பெற்றுச் சென்ருர். அரசனது தமிழ் அன்புக்கு இணை சொல்ல முடியுமா ?

## அருஞ்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| முடியுடை | பேராவல் | இயலாத | அறிகுறி | கவரி |
| வேந்தர் | கணைத்து | வனப்பை | சினம் | புனிதம் |
| தவருத | சோர்வு | வியந்த | உறை | வாழ்த்துரை |
| நேர்மை | கொலு | உறக்கம் | தூய்மை | அளவளாவி |
| நீங்கா | காவலன் | முரசு | இரை | இணை |

## கேள்விகள்

1. இரும்பொறை மன்னனின் குணங்களைக் கூறுக.
2. மோசிகீரனுர் என்பவர் யார் ?
3. சேர நாட்டுக்குப் போனபோது அவர் நிலை என்ன ?
4. புலவர் முரசு கட்டிலில் ஏன் ஏறிப் படுத்தார் ?
5. அவருக்கு உறக்கம் வரக் காரணங்கள் யாவை ?
6. முரசு கட்டில் என்பது யாது ? அதன் பெருமை யாது ?
7. இரும்பொறை கட்டிலில் துயின்றவரை என்ன செய்வதாக எண்ணிச் சென்ருன் ?
8. இரும்பொறை தமிழ் அன்பு மிக்கவன் என்பதை எப்படி அறியலாகும் ?
9. மோசிகீரனுர் இரும்பொறையை எங்ஙனம் வாழ்த்தினுர் ?

### பயிற்சி

1. வாக்கியத்தில் அமைத்து எழுதுக:--தவருத, அறிகுறி, அளவளாவி, வாழ்த்துரை, உறக்கம்.
2. அரசனைக் குறிக்கும் வேறு சொற்களைப் பொறுக்கி எழுதுக.
3. முதல் பத்தியில் உள்ள வாக்கியங்களின் பயனிலைகளைப் பொறுக்கி எழுதுக.

### இலக்கணம்

புலவர் வெயிலால் மிகவும் களைத்திருந்தார்--இவ்வாக்கியத்தின் பயனிலை யாது? களைத்திருந்தார் என்பது அல்லவா? பயனிலையைக் கொண்டு **யார் களைத்திருந்தார்?** என்ற கேள்வியைக் கேள். புலவர் களைத்திருந்தார் என்பதுதானே விடை? நாம் கேட்ட கேள்விக்கு வரும் விடையாகிய **புலவர்** என்ற சொல்லைக் கவனி. இதுவே இவ்வாக்கியத்தின் **எழுவாய்.** எனவே, பயனிலையை வைத்து **யார்** அல்லது **எது** என்று கேட்கும் கேள்விக்கு வரும் விடையே எழுவாயாகும்.

**ஒரு வாக்கியத்தின் முக்கியப் பாகமாக இருப்பது எழுவாய்** என்பதைத் தெரிந்துகொள்.

(அ) பின் வரும் வாக்கியங்களின் எழுவாய்களை எடுத்துக் காட்டுக:

1. இரும்பொறை தமிழினிடத்து நீங்கா அன்பு கொண்டவன்.
2. அவன் வள்ளலாக விளங்கினன்.
3. புலவர் களைத்துச் சோர்ந்திருந்தார்.

(ஆ) மேற்கண்ட வாக்கியங்களின் பயனிலைகளை எடுத்து எழுதுக.

# 4. நகராண்மைக் கழகம்

இந்திய நாடு பல இராச்சியங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வோர் இராச்சியமும் பற்பல மாவட் டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மாவட் டத்திலும் பற்பல நகரங்களும், கிராமங்களும் இருக் கின்றன. கிராம மக்களுக்கு நன்மைகளைச் செய்ய ஒரு கழகம் உண்டு. அது பஞ்சாயத்து அல்லது ஊராண்மைக் கழகம் என்று கூறப்படுகின்றது. அதுபோலவே ஒரு நகரத்தின் தேவைகளை அறிந்து நகரத்திற்கு வேண்டியவற்றைக் கவனிக்கும் அவைக்கு **நகராண்மைக் கழகம்** என்பது பெயர்.

நகராண்மைக் கழகத்தில், நகரிலுள்ள மக்க ளது எண்ணிக்கைக்குத் தக்கவாறு உறுப்பினர்கள் இருப்பார்கள். உறுப்பினர்களை நகரின் மக்கள் தேர்தல் மூலமாகத் தேர்ந்து எடுப்பார்கள். உறுப் பினர்கள் யாவரும் பொதுப் பணியில் ஆர்வமுள்ள வர்களாக இருக்க வேண்டும். இருபத்தொரு வய தைப் பெற்ற அனைவரும் இத் தேர்தலில் கலந்து கொள்ளலாம்.

வயது வந்த ஒவ்வொருவரும் வாக்காளராவர். அவர்களுக்கு வாக்குரிமை உண்டு. அவர்கள் தேர் தல் நடக்கும் இடங்களுக்குச் சென்று, தம் வாக் குரிமையைத் தாம் விரும்புபவருக்கு அளித்துவிட்டு வருவர். பின்னர், தேர்தலில் போட்டியிட்டவர்கள் பெற்ற வாக்குகளை எண்ணி, மிகுதியான வாக்கு களைப் பெற்றவர்களின் பெயர்களைத் தேர்தல் அதி காரி கூறுவர். இங்ஙனம் நகராண்மைக் கழக உறுப்

பினர்கள் யாவரும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். உறுப்பினர்கள் ஒன்றுகூடி நகராண்மைக் கழகத் தலைவரைத் தேர்ந்தெடுப்பர்.

நகராண்மைக் கழகத் தலைவர் என்பதை 'முனிசிபல் சேர்மன்' என்று ஆங்கிலத்தில் கூறுவர். தலைவரும், உறுப்பினர்களும் கூடி நகரத்திற்கான நலன்களைத் திட்டமிடுவர். திட்டமிடுவனவற்றைச் செயலில் ஆற்றுபவர் ஆணையாளர் ஆவர். அவ



ரைக் 'கமிஷனர்' என்று ஆங்கிலத்தில் கூறுவர். ஆணையாளருக்கும், அவருக்கு உதவி புரிய இருக்கும் அலுவலாளர்களுக்கும் ஊதியம் உண்டு. நகராண்மைக் கழகத் தலைவருக்கும், உறுப்பினர்களுக்கும் ஊதியம் இல்லை.

விளக்குப் போடுதல், குடி தண்ணீர் வசதி செய்தல், தெருக்களைச் செப்பனிட்டுத் தூய்மையாகப் பாதுகாத்தல், பிணிகளைத் தடுத்தல், தொடக்கப் பள்ளிகள், நூலகம் ஆகியவற்றை நிறுவுதல் போன்ற பல செயல்களை நகராண்மைக் கழகம் மேற்கொள்ளும். இவைகளைச் செய்வதற்கும், செய்வனவற்றை மேற்பார்வை இடுவதற்கும் பணியாளர்கள் பலர் இருப்பர்.

மேலே குறிப்பிட்ட பணிகளைச் செய்யச் செல்வம் வேண்டுமல்லவா? நகராண்மைக் கழகம் தனக்கு வேண்டிய நிதியை மக்களிடமிருந்தே வரிகளாகப் பெறுகின்றது. வீட்டு வரி, தொழில் வரி, வண்டி வரி போன்ற பல வரிகளால் நாம் நகராண்மைக் கழகத்திற்குப் பணம் கொடுக்கிறோம். இவையேயன்றி அது வேறு பல கட்டணங்களையும் தொழிற்சாலை, உணவு விடுதிகள் ஆகியவற்றினிடமிருந்து பெறுகின்றது.

நம் தமிழ் நாட்டுக்குத் தலைநகரம் சென்னை. சென்னையின் நகராண்மைக் கழகம், பிற கழகங்களை விடப் பெரியது. அதனால் அதனைக் 'கார்ப்பரேஷன்' என்று கூறுவர். கார்ப்பரேஷனின் தலைவரை 'மேயர்' என்று கூறுவர். சென்னைக் கழகமும் நம் நகராண்மைக் கழகங்களைப்போல மக்களுக்குப் பொது நலப் பணிகள் பலவற்றை ஆற்றி வருகின்றது. நீங்கள் பெரியவர்களாகும் பொழுது இத்தகு பொது நலப்பணிகளை ஆற்ற விரும்புவீர்கள் அல்லவா?

## அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | பொதுப்பணி | வாக்குரிமை | கழகம் |
| ஆர்வம் | இராச்சியம் | தேவைகள் | உறுப்பினர் |
| தேர்தல் | வாக்காளர் | கவுன்சிலர் | நலன்கள் |
| ஊதியம் | இத்தகு | திட்டமிட்டு | நூலகம் |
| ஆணையாளர் | பணியாளர் | அலுவலாளர் | ஆற்றி |

## கேள்விகள்

1. நகராண்மைக் கழகம் என்பது யாது ?
2. நகராண்மைக் கழக உறுப்பினர்களின் இயல்பு யாது ?
3. கழகத்தின் உறுப்பினர்கள் தேர்த்தெடுக்கப் படுவது எங்ஙனம் ?
4. கழகத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவது எப்படி ?
5. ஆணையாளர் என்பவர் யார் ? அவரது வேலை யாது ?
6. நகராண்மைக் கழகம் மேற்கொள்ளும் வேலைகள் யாவை ?
7. நகராண்மைக் கழகப் பணியாளர்களுள் எவருக்கு ஊதியமுண்டு ?
8. நகராண்மைக் கழகத்திற்குப் பணம் வரும் வழி யாது ?
9. சென்னையில் இருக்கும் கழகத்தின் பெயர் யாது ? அதற்கு அப்பெயர் இடப்பட்டதேன் ?

## பயிற்சி

1. **வாக்கியத்தில் அமைத்து எழுதுக:**
   தேவைகள், வாக்குரிமை, திட்டமிடு, மேற்கொள்ளும், மாவட்டம், பணியாளர், ஊதியம்.
2. நீ இருப்பது நகரமா ? உன் நகராண்மைக் கழகத்தின் தலைவர் யார் ? அக்கழக நிலையத்திற்குச் சென்று அங்கு நடக்கும் வேலையைக் கவனி.

3. கிராமத்தில் இருக்கும் கழகத்திற்குப் பஞ்சா யத்து என்பது பெயர். அதைப்பற்றி நீ அறிந்துகொள்.

## இலக்கணம்

1. கீழ்க்கண்ட வாக்கியங்களுக்கு எழுவாய், பய னிலை, செயப்படுபொருள்களை அடியிற் கண்ட வாறு கூறுக.

உதாரணம் :-உறுப்பினர்களை நகரின் மக்கள் தேர்ந் தெடுப்பர்.

| | எழுவாய் | பயனிலை | செயப்படுபொருள் |
|---|---|---|---|
| 1 | நகரின் மக்கள் | தேர்ந்தெடுப்பர் | உறுப்பினர்களை |

(அ) வயது வந்த ஒவ்வொருவரும் வாக்காள ராவர்.

(ஆ) நகராண்மைக் கழகம் பொது நலப் பணிகளை ஆற்றி வருகின்றது.

(இ) தலைவர் மக்களுக்குரிய நலன்களைத் திட்ட மிடுவர்.

2. பயனிலைகள் மூன்று வகைப்படும். தமிழில் வினை முற்று, வினைச்சொல், பெயர்ச்சொல் என்ற மூன்றும் பயனிலைகளாக வரும். புத்தகம் இருக் கிறது—என்பதில் இருக்கிறது என்ற வினைமுற்று பயனில்லை. அது புத்தகமா? என்பதில் புத்தகமா என்ற வினைச்சொல் பயனிலை. அது புத்தகம் என்பதில் புத்தகம் என்ற பெயர்ச்சொல் பயனிலை.

3. மூவகைப் பயனிலைகளும் வருமாறு மும்மூன்று வாக்கியங்கள் எழுதுக.

---

## 5. நெய்தல் தொழில்

மக்களுக்குரிய தேவைகளில் முக்கியமானது ஆடை. 'ஆடையற்றவன் அரை மனிதன்,' 'ஆள் பாதி ஆடை பாதி', 'இரக்கப் போனாலும் சிறக்கப் போ', 'அணி யெல்லாம் ஆடையின் பின்' என்னும் முது மொழிகள் ஆடையின் சிறப்பைக் கூறுகின்றன.

பழங்காலத்து மனிதனுக்கு ஆடை தேவைப்பட வில்லை. சிறிது சிறிதாக அவன் நாகரிகம் அடைந்த காலத்து, அவனுக்கு ஆடை தேவையாயிற்று. அவன் இலை தழை ஆகியவற்றை ஆடைகளாக அணியத் தொடங்கினன்; பின்னர், தன் உணவுக் காகக் கொன்ற விலங்குகளின் தோலை ஆடையாக அணிந்தான். காடு வெட்டி நாடாக்கி நன் முறை யில் வாழத் தெரிந்ததும், பருத்தி, பட்டு முதலிய வற்றல் ஆன ஆடைகளை அவன் அணியத் தொடங் கினன். குளிர் நாடுகளில் வசிப்பவன் குளிரைத் தாங்கும் வண்ணம் கம்பள ஆடைகளை அணியத் தொடங்கினன்.

பண்டைக் காலத்துத் தமிழ்நாடு நெசவுத் தொழிலில் சிறந்து விளங்கியது. தமிழர் மிக மெல் லிய ஆடைகளை நெய்து உடுத்தி வந்தனர். வெளி நாடுகளுக்கும் அனுப்பி வந்தனர். பஞ்சு, பட்டு, பலவகை மயிர் ஆகியவற்றல் நெய்த ஆடை கள் பால் ஆவியைப் போன்று விளங்கின என்று நம் சங்க நூல்கள் கூறுகின்றன.

முற்காலத்துச் சான்றோர் நெசவுத் தொழிலை மதித்துப் போற்றினர். உழவுத் தொழில் செய்பவர்

பலர் நெசவுத் தொழிலை ஓய்வுத் தொழிலாகக்கொண் டிருந்தனர். திருவள்ளுவர் போன்ற சான்ருேர்களும் இத்தொழிலைச் செய்து வந்தனர் என்று கூறுவர். நெசவுத் தொழிலை நூலியற்றுதற்குச் சமமாகப் புலவர் ஒருவர் கூறுகிருர். நூல் நூற்கும் தொழிலைப் பெரும்பாலும் பெண்களே செய்து வந்தனர். இஃது அவர்களுக்கு ஊதியம் தருவதாய் இருந்தது. மேலும் சிறந்த பொழுதுபோக்காகவும் இருந்தது.



கைத்தறியினுல் ஆடை நெய்வது எப்படி என்று பார்ப்போம் : முதலில் பருத்தி சுத்தம் செய்யப்படும். பின்னர், அது அரைமணை என்னும் கருவியிலிட்டு அரைக்கப்படும். இதனுல் பஞ்சு வேறு, கொட்டை வேருகப் பிரியும். பிரித்தெடுத்த பஞ்சு மேலும் தூய்மை அடைய, வில்லால் அடிக்கப்படும். அப் போது அது நூற்பதற்கு ஏற்றவண்ணம் அமை கிறது. சிலர், தக்கிளியால் நூற்பர். பலர் கைராட் டினம் கொண்டு நூற்பர்.

நூற்ற நூல் தேய்த்துப் பதஞ் செய்யப்படும்; பாவாற்றி என்னும் கருவி கொண்டு பசையிட்டு உலர்த்தப்படும். இதுவே பாவு நூல் எனப்படும். நெசவாளர் இதனை உருளையிலிட்டுச் சுற்றித் தறியில் விடுவர்; குறுக்கே நூலிடுவதற்குரிய குழல் என்னும் கருவியால் குறுக்கு நூலைச் செலுத்துவர். குறுக்கு நூலுக்கு ஊடை என்பது பெயர். இவை இரண்டும் நெய்பவன் திறமையால் ஒன்று சேர்ந்து ஆடையாக மாறும். இங்ஙனம் கையினுல் நூற்கப்பட்டு நெய்யப் படுவதே கதர் ஆடையாகும்.

இயந்திரங்களினுல் நூற்கப்படும் நூல் தற்காலத்தில் வேண்டுமளவு கிடைக்கின்றது. இயந்திர நூலைக் கைத்தறியில் நெய்வதும் உண்டு. கைத்தறியினுல் நெய்யப்படும் ஆடைகளுக்குக் கைத்தறி ஆடைகள் என்பது பெயர். இயந்திர நூலை இயந்திரங்களின் உதவியால் நெய்வதும் உண்டு. இத்தகு ஆலைகள் மேனுடுகளில் மிகுதியாக இருக்கின்றன. நம் தமிழ் நாட்டிலும் கோவை, மதுரை, தூத்துக்குடி முதலிய இடங்களில் ஆலைகள் உள்ளன. கைத்தறி ஆடைகள், சேலம், மதுரை, காஞ்சிபுரம் முதலிய இடங்களில் மிகுதியாக நெய்யப்படுகின்றன.

பழங்காலத்தில் சீரும் சிறப்பும் பெற்ற நம் பண்டை நெசவுத் தொழில், மேனுட்டு ஆலைத் துணிகளின் இறக்குமதியால் அழிந்தது. நமக்கு விடுதலை அளிக்க வந்த மகாத்மா காந்தி அடிகள் வெளிநாட்டு ஆடையை ஒதுக்கித் தள்ள வேண்டும் என்றும், நம் நாட்டு ஆடையையே நாம் உடுக்க வேண்டும் என்றும் அறிவு புகட்டினுர். அக்கால முதலே கதர்

ஆடைக்கும் கைத்தறி ஆடைக்கும் நல்ல செல்வாக்கு உண்டாயிற்று; மக்கள் கதராடை வாங்கினர்; கைத்தறி ஆடைக்கும் ஊக்கம் அளித்தனர். நசித்துப் போயிருந்த நம் நாட்டுக் கைத்தொழில் மீண்டும் தழைத்தோங்கிற்று. நம் நாட்டுப் பண்டைக் காலக் கைத் தொழிலைப் பாதுகாப்பது நம் கடமையாகும்.

## அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| உரிய | சான்றோர் | தக்கிளி | கதராடை |
| இரக்க | மதித்து | இராட்டினம் | குறுக்குநூல் |
| சிறக்க | நூல் | பாவாற்றி | திறமை |
| நன்முறை | அரைமணை | குழல் | விடுதலை |
| பாலாவி | தூய்மை | ஊடை | கடமை |

## கேள்விகள்

1. ஆடையைப் பற்றிய பழமொழிகளைப் பொறுக்கி எழுதுக.
2. பழங்காலத்து மனிதன் அணிந்த ஆடைகள் யாவை ?
3. நம் சங்க நூல்கள் ஆடைகளைப் பற்றி என்ன கூறுகின்றன ?
4. நெசவுத் தொழில் பண்டைக்காலத்தில் நம் நாட்டில் எங்ஙனம் போற்றப்பட்டு வந்தது ?
5. கதராடை எங்ஙனம் நெய்யப்படுகிறது ?
6. கைத்தறி ஆடை, ஆலைத்துணி ஆகியன எங்ஙனம் நெய்யப்படுகின்றன ?

7. அரைமணை, தக்கிளி, பாவாற்றி, குழல், ஊடை என்பனவற்றைப் பற்றி ஒவ்வொரு வரி எழுதுக.

8. நம் நாட்டில் சிறப்பாகக் கைத்தறி ஆடைகள் நெய்யப்படும் இடங்கள் யாவை?

9. நம் நாட்டில் ஆலைத் துணிகள் நெய்யப்படும் இடங்களைக் கூறுக.

10. நம் நாட்டு நெசவுத் தொழில் அழிந்ததேன்?

11. நெசவுத் தொழில் எப்போது பழைய நிலையை அடைந்தது?

12. இனி நம்முடைய கடமை யாது?

## பயிற்சி

வாக்கியத்தில் அமைக்க:—

சிறிதுசிறிதாக, மதித்துப் போற்றினர், திறமையால், மிகுதியாக, செல்வாக்கு.

## இலக்கணம்

புத்தகம் படித்தான்—புத்தகம் என்பது ஒரு பொருளின் பெயர். ஆதலால் இது பெயர்ச் சொல். படித்தான்—என்பது ஒரு பொருளின் வினையைக் குறிப்பது. ஆதலால் இது வினைச்சொல்.

இப்பாடத்திலிருந்து பெயர்ச்சொல், வினைச் சொல் வகைக்கு நந்நான்கு கூறுக.

---

# 6. இராமனும் பரதனும்

(நாடகம்)

## காட்சி 1

இடம் : சித்திரக்கூடம்.

நேரம் : காலை.

உறுப்பினர் : இராமன், இலக்குமணன்.

[பரதன் தன் படைகளுடன் தொலைவில் வந்து கொண்டிருக்கிறான்.]

இலக்குமணன் : (ஓடோடியும் வந்து) அண்ணா! அதோ பாருங்கள். ஒரு பெருஞ் சேனை வருகிறது. பார்த்தால் பகைவர் படையெடுத்து வருவது போலத் தோன்றுகிறது.

இராமன் : அப்படியா ! தம்பி இலக்குமணா ! நமக்கு யார் பகைவர்கள் ? ஒருவருமில்லையே. பொறு! பார்க்கலாம்.

இலக்கு : அண்ணா, அப்படிச் சொல்லாதீர்கள். பரதனைவிடப் பகைவன் வேறு யார் ? தாயிடம் சொல்லி அவன் நாட்டைப் பெற்றுக் கொண்டான் ; நகரில் இருக்கவிடாது நம்மைக் காட்டிற்கு ஓட்டியுள்ளானே. இது பகைவனது செயலாகாதா ? அவனை நாம் இப்படியே விட்டு வைக்கலாகாது. எனக்கு விடை கொடுங்கள். அவனை அழித்து விட்டு வருகிறேன்.

இராமன் : தம்பி ! பொறு. பதறுத காரியம் சிதறுது. உன்னால் செய்ய முடியாதது ஒன்றும் இல்லை.

ஆயினும் நான் சொல்வதைக் கேள். நம் குலத்தவர் எவரும் அறத்தினின்று வழுவிய தில்லை. எனவே பரதனும் தீய எண்ணத்துடன் வரவில்லை. உன் எண்ணத்தை விட்டு விடுவா யாக.

**இலக்கு :** அண்ணா ! அப்படியாயின் காட்டில் பரத னுக்கு என்ன வேலை ? தாய் பெற்றுத் தந்த அரசை ஆண்டுகொண்டு அயோத்தியில் அல்லவா இருக்க வேண்டும் ?

**இராமன் :** தம்பி இலக்குமணா ! பரதன் இயல்பினை நீ அறியாய். அவன் இங்கு வருவது நம்மை வருத்துவதற்கன்று. அவன் தான் பெற்ற அரசை எனக்கு அளிப்பதற்காகவே வருகிறான். நீ சற்றுப் பொறுமையுடன் இருந்து நடப்பதைக் கவனி.

**இலக்கு :** சரி அப்படியே இருக்கிறேன்.

(திரை விழுகிறது)

## காட்சி 2

இடமும் காலமும் : முற்கூறியன.

உறுப்பினர் : இராமன், பரதன், இலக்குமணன், வசிட்டர் முதலியோர்.

(பரதனும் சத்துருக்கனனும் தொழுத கையும், துவண்ட மேனியும், அழுத கண்ணுமாய் வருகின்றனர்.)

**இராமன் :** (இலக்குமணனைப் பார்த்து) தம்பி இலக்கு மணா பார்! எதிரே வரும் பரத சத்துருக்கனரைப்

பார்! அவர்களுடைய உருவத்தைக் கவனி! அவர்கள் பூண்டுள்ள கோலம் போர்க்கோலமா? நன்ருகக் காண்க!

(இலக்குமணன் வெட்கத்தால் தலை கவிழ்ந்து நிற்கிருன்.)

பரதன்: (இராமன் பாதத்தில் வீழ்ந்து வணங்கி) அண்ணு, என்ன காரியம் செய்தீர்! அரசாள்வதை விடுத்து இங்ஙனம் வரலாகுமா, இஃது ஏற்ற செயலாகுமா?



இராமன்: தம்பி பரதா! எழுந்திரு. தந்தை நலந்தானே?

பரதன்: (ஓ வெனக்கதறி) அண்ணு, பாவி நான் பிறந்த காரணத்தால் தந்தை இறந்தார். உம் பிரிவு அவரது உயிருக்கு உலை வைத்துவிட்டது. என்ன செய்வேன்! என்னைப் பெற்றவள் பெற்ற வரமும், உம் பிரிவும் தந்தைக்குக் காலனுக அமைந்தன.

இராமன் : (கோவெனக் கதறித் தரையில் விழுந்து) அவியாத விளக்கை ஒத்த நாயகனே ! பூமியில் உள்ளவர்க்கெல்லாம் தந்தையாக வாழ்ந்த வனே ! அறத்தின் இருப்பிடமாக அமைந்த வனே ! இனி உண்மைக்கு இருப்பிடமாக உள்ளவர் யார் ? நீ இறப்பதற்குத்தான் நான் பிள்ளையாகப் பிறந்தேனே! இனி நான் யாருக் காக என் உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டும்? நீ இறந்தாய் எனக் கேட்டும் உயிர் வைத்துக் கொண்டிருக்கும் என்னிடமா மிக்க அன்பை வைத்துக் கொண்டிருந்தாய்! ஒப்பற்ற குணங்களைப் படைத்த உத்தமனே ! வலிமை, நீதி தவறாத ஆட்சி முதலியவற்றை யெல்லாம் உன்னுடன் எடுத்துக்கொண்டு சென்றாயே ! நான் என்ன செய்வேன் ! (ஆறாத்துயரத்துடன் புலம்பல்)

வசிட்டர் : இராமா! நீ இங்ஙனம் வருந்தலாகாது. இறத்தலும் பிறத்தலும் இயற்கையல்லவா ? பிறந்தவுடனே பெற்ற தாய் இறப்பதை நாம் கண்டதில்லையா ? பலவாண்டுகளாக ஆட்சி புரிந்த உன் தந்தையின் பொருட்டு நீ வருந்த வேண்டுமா ? இவ்வுலகில் பிறந்தவை யாவும் இறக்க வேண்டியனவே ! அவற்றுள் ஒருவன் தானே உன் தந்தையும்! அதற்காக நீ வருந்துத லாகாது. எனவே நீ அவனுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்வாயாக. அதுவே நீ உன் தந்தைக்குச் செய்யத்தக்க உதவி. வருந்துவதை விடுத்து ஆவன செய்க.

**இராமன்:** (சிறிது தேறி) எம் குலகுருவே! இனி யான் என்ன செய்ய இயலும்! இறைவன் ஆணை இது. போகலாம். (போகின்றனர்)

(திரை விழுகிறது)

## காட்சி 3

இடம் : சித்திரக்கூடம், பர்ணசாலை.

நேரம் : முற்பகல்.

உறுப்பினர் : இராமன், பரதன், வசிட்டர், தேவர்கள் முதலியோர்.

**இராமன் :** தம்பி பரதா! நம் தந்தையாரோ இறந்து விட்டார். அவர் இட்ட கட்டளைப்படி அரசும் உன்னுடையது. அங்ஙனமிருக்க, நீ தவக் கோலம் பூண்டுள்ள காரணம் யாது?

**பரதன் :** (பதைபதைத்து) அண்ணலே! நான் தீ வினையுடையவன். நான் தவஞ்செய்யும் தகுதியைப் பெற்றவன் அல்லன். உலகத்தையே துன்பத்தில் ஆழ்த்திய பாவியின் மகன். தவஞ் செய்தலால் எந்த நன்மையும் அடைய முடியாது.

**இராமன்:** பரதா! நீ இங்ஙனம் வருந்துதல் கூடாது. அண்ணல் தசரதன் ஆணைப்படி அரசாளுதல் உன்னுடைய கடமையாகும்.

**பரதன் :** அண்ணலே! ஒரு குடும்பத்தில் மூத்தவன் அரசாளுதல் முறைமை. நீர் அரச பதவியைத் துறந்து கானில் வசிக்கிறீர். நான் அரசாளுதல் எப்படி முறையாகும்? தந்தை தசரதனும்

தாய் கைகேயியும் செய்த பாவம் நீங்க வேண்டும். அதற்காகவாவது நீர் அயோத்திக்குத் திரும்பி வரவேண்டும்; ஆட்சி புரிய வேண்டும்.

இராமன்: வெற்றி வீரனே! நான் கூறுவதைக் கேள். நல்லொழுக்கம், உண்மை, நீதி, அறம் ஆகிய யாவும் அரசரது கட்டளையால் உண்டாவனவாகும். கேள்வி, ஞானம், நல்லொழுக்கம் ஆகியன பெரியோர்களால் உண்டாவன. அப் பெரியோர்கள் பெற்றோர்களே யாவர். அப்படியிருக்க நம் பெற்றோர் இட்ட கட்டளையை நாம் மீறலாகுமா? நான் அரசு புரிந்தால் நம் தந்தையைப் பொய்யனாக ஆக்கியவன் ஆவேனல்லவா? நம் தந்தை கொடுத்த வரத்தின் காரணத்தால் அரசு உன்னுடையதேயாகும். நீ அதை ஆள்வாயாக. அதுதான் உன் கடமையாகும்.

பரதன்: அண்ணா! உமக்குச் சமம் நீரே. நீர் கூறியபடி அரசு என்னுடையது என்றே வைத்துக் கொள்வோம். யான் என் அரசை உமக்குக் கொடுக்கிறேன்; நீர் வந்து அரசாட்சியை ஏற்றுக் கொள்வீராக.

இராமன்: பரத! மனத்தைத் தூய்மையாக்குவது உண்மை ஒன்றே. உண்மை தவறுதலால் பல தீமைகள் உண்டாகும். ஆகையால் நம் தந்தை கூறியபடி நான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசித்தேயாகவேண்டும். நீ நம் தந்தையின் வாக்குத் தவறாதபடி அக்காலம் முடிய

நாட்டை ஆள்க. இது என் கட்டளை. நீ மறுக்கக்கூடாது.

பரதன் : அண்ணலே !

வசிட்டன் : பரத ! பொறு. இராமா, நான் சொல் வதைக் கேள். உன்னுடைய வமிசம் மிகவும் பழமையானது. அக்குலத்தவர் முறையின்படி நடக்க வேண்டியது உன்னுடைய கடமை யாகும். இவ்வுலகம் உண்டான காலம் முதல் இன்றுவரை உன் குல மன்னர்கள் முறைமை தவறியதில்லை. மேலும், யான் உனது ஆசிரி யன். ஆசிரியன் ஐங்குரவர்களில் உயர்ந்தவன். என் வார்த்தையை நீ தட்டுதல் கூடாது. எனவே இராமா, நீ அயோத்திக்கு வந்து உனக் குரிய ஆட்சியினை ஏற்றுக் கொள்வாயாக.

இராமன் : (முனிவனை வணங்கி) ஐயனே ! ஒருவர் இட்ட கட்டளையை ஒப்புக் கொண்ட பின் அதைச் செய்யாமல் இருக்கலாகுமா ? அங்ஙன மிருக்கத் தாய் கட்டளையிட்டு, தந்தை செய்க என்று கூறியதை யான் செய்யாமலிருந்தால் தகுமா ? அப்படிச் செய்யாமல் இருந்தால் செய்யத்தக்கது இது, செய்யத்தகாதது இது என்று அறியாத நாய்க்குச் சமமாக ஆகேனோ ? தாய் தந்தையர் மொழிப்படி நடப்பேன் என்று முன்னரே ஏற்றுக் கொண்டுள்ளேன். இப் பொழுது நீர் வேறு வகையாகக் கட்டளை இடுகிறீர். நான் எதைச் செய்வது ? அருள் புரிவீராக.

**பரதன் :** (வசிட்டரைப் பார்த்து) ஐயனே! அப்படியானல் அரசினை ஆள்பவர் ஆளட்டும். நான் என் அண்ணன் இராமபிரானுடன் காட்டில் இருக்க முடிவு செய்து விட்டேன். இது உறுதி.

**தேவர்கள் :** (அசரீரியாய்) பரத! இராமன் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசிக்கவேண்டும். நீ அக்காலம் வரை அரசு செய்ய வேண்டும்.



இவை நும் இருவராலும் நிறைவேற்றுவதற் குரிய கடமைகளாகும். இவற்றினின்றும் தவருதீர்கள்.

**இராமன் :** பரத! வானவர்கள் கூறுவதைக் கேட்டாயல்லவா? அவர்கள் சொல்லை மீறுதல் தகாது. உன்னை வேண்டிக் கொள்கிறேன். நீயே என் கட்டளைப்படி தகுதியான முறையில் அரசாள்வாயாக. (இரு கைகளையும் பற்றிக் கூறுகிருன்.)

பரதன் : அண்ணலே ! அப்படியாயின் பதினுன்கு ஆண்டுகள் காத்திருப்பேன். அக்காலம் கடந் ததும் நீர் வந்து இராச்சியத்தை மேற்கொள்ளா விடின் தீயில் விழுந்து இறப்பேன். இது உறுதி; உம் மீது ஆணை.

இராமன் : (பரதனது துணிவைப் பார்த்து) அப்பா பரதா ! அப்படியே ஆகட்டும்.

பரதன் : (வருத்தமுற்று விம்மியழுது) நான் செய்வது வேறு ஒன்றும் இல்லை. எனக்கு உதவியாக உம் பாதுகையைத் தருவீராக. எல்லா இன்பங் களையும் தரும் அப்பாதுகைகள் எனக்கு உதவியாக இருக்கட்டும். (வணங்குகிருன்)

இராமன் : பரத ! (கட்டித் தழுவி) நீ வேண்டிய படியே பெற்றுக் கொள். (பாதுகைகளைத் தருகி ருன்)

(பரதன் பாதுகைகளைத் தலையில் தாங்கிச் செல் கிருன்.)

(திரை விழுகிறது)

அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| பகையாளி | பொறுமை | குணங்கள் | சிதருது |
| பூண்டுள்ள | இரங்க | விடை | வழுவியது |
| கோலம் | ஆணை | அழித்து | காலனுக |
| வருந்துதல் | பதருத | இயல்பு | ஒப்பற்ற |
| அண்ணல் | முறைமை | துணிவு | வாக்கு |
| பாதுகை | ஏற்றுக்கொள் | ஐங்குரவர்கள் | நிறைவேற்று |

## கேள்விகள்

1. பரதன் பகைவன் என்பதை இலக்குமணன் கூறுவதெப்படி ?
2. இராமன் இலக்குமணனை அமைதிப்படுத்தியதெவ்வாறு ?
3. தந்தை இறந்தமைக்குப் பரதன் கூறும் காரணங்களைக் கூறுக.
4. இராமன் தந்தை இறந்தமையைக் கேட்டவுடன் வருந்திக் கூறியவற்றைக் கூறுக.
5. வசிட்டர் எப்படி இராமனைத் தேற்றினர் ?
6. பரதன் இராமனை அரசாள வருமாறு என்ன கூறி வேண்டுகின்றான் ?
7. இராமன் தான் அரசாளுதல் முறைமையன்று என்பதை எப்படி எடுத்துக் கூறுகின்றான் ?
8. வசிட்ட முனிவர் யார் ? அவர் இராமனுக்குக் கூறும் அறிவுரை யாது ?
9. இராமன் வசிட்டருக்குக் கூறிய மறுமொழி யாது ?
10. தேவர்கள் அசரீரியாகக் கூறியது யாது ?
11. பரதன் ஆணையிட்டுக் கூறியன யாவை ?
12. பரதன் இராமனிடம் பெற்றுச் சென்றது யாது ? அதன் பெருமை என்ன ?

## பயிற்சி

1. இந்த நாடகத்தை நடித்துக் காட்டுக.
2. 'இராமனும் பரதனும்' என்ற தலைப்பில் ஒரு கதை வரைக.

3. இந்த நாடகத்திலிருந்து பின் வருபவர் ஒவ்வொரு வரைப் பற்றியும் ஐந்தைந்து வரிகள் எழுதுக : இராமன், பரதன், இலக்குமணன்.

4. பின்வருபவற்றைச் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :

   பதருத, ஏற்றுக்கொள், நிறைவேற்று, பூண்டுள்ள, கோலம்.

5. தெரிந்து கொள்க ;—

   ஐங்குரவர்கள்—தாய், தந்தை, குரு, அரசன், கடவுள். அறம் X மறம்.

6. யோசித்து இரு பொருள் தருக : கோலம்.

7. வேறுபாடு கூறுக :—

   இரங்கு, இறங்கு ; அழித்து, அளித்து.

## இலக்கணம்

பரதன் இராமனைச் **சந்தித்துப் பேசினன். வந்த** பரதனைப் பகைவனாகக் கருதினன் இலக்குமணன்.

மேற்கண்ட வாக்கியங்களில் **சந்தித்து, வந்த, பேசினன்** என்ற சொற்களைக் கவனி. இவை வினைச் சொற்கள்.

இவற்றுள் **பேசினன்** முடிந்த சொல். எனவே இது **வினைமுற்று. சந்தித்து, வந்த** என்பன முடியாமலுள்ள சொற்கள். இவை எச்ச வினைகள்.

**சந்தித்து** என்பது, பேசினன் என்ற மற்றொரு வினையைக் கொண்டு முடிகிறது. எனவே, இது **வினையெச்சம்** எனப்படும்.

**வந்த** என்ற எச்சவினை, பரதன் என்ற பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிகிறது. எனவே, இது **பெயரெச்சம்** எனப்படும்.

உன் பாடத்திலிருந்து இவற்றுள் வகைக்கு ஐந்து உதாரணங்கள் தருக.

# 7. வானொலி

சென்னையில் பாடுபவர் பாட்டை எவ்வூரிலிருந்தும் கேட்கிறோம். நம் இந்தியத் தலைநகரில் அன்றாடம் நிகழ்வதை அருகில் இருக்கும் ஊரில் நிகழ்வதைக் கேட்பது போலக் கேட்கிறோம். இது எப்படி நடைபெறுகிறது? வானொலிப் பொறியினால் இந்த விந்தையான செயல் நடைபெறுகின்றது என்பதை யாவரும் அறிவர்.



வானொலி கேட்கும் குடும்பம்

முதன் முதலில் 1920-ஆம் ஆண்டில், இப்பொறியின் மூலம் இங்கிலாந்து மக்கள் இசையை அநுபவித்தனர். பின்னர் எல்லா நாடுகளிலும் வானொலி பணி ஆற்றுவதாயிற்று. இருபதாம் நூற்றாண்டில் கண்டுபிடித்த விஞ்ஞானப் புதுமைகளுள் ரேடியோ எனப்படும் இவ்வானொலி சிறந்ததா

கும். பல வகையில் பயன்படுகின்ற இந்தப் பொறியைப் பற்றி நாம் அறிந்துகொள்ளுதல் வேண்டும்.

இன்று நாம் காணும் இப்புதுமைக்குக் காரணமாயிருந்தவர் பலர். இவர்களுள் மார்க்கோனி என்பவர் முக்கியமானவர். அறிஞர் மார்க்கோனி இத்தாலிய நாட்டினர் ஆவர். இவர் தமது இருபதாவது வயதிலேயே மின்சாரத்தினைப் பற்றி ஆராயத் தொடங்கினர்; பரந்த வானத்தில் கம்பிகளின் உதவியின்றிச் செய்திகளை அனுப்பும் விந்தையைக் கண்டுபிடித்தார்; பின்னர், நாம் விரும்பிக் கேட்கும் வானொலியைக் கண்டுபிடித்தார்.

நீரில் கல்லெறிந்தால் அலைகள் சுற்றிச் சுற்றி வட்டமாகச் செல்லுவதை நாம் கண்டிருக்கிறோம். அவை வர வரப் பெரிதாகி இறுதியில் மறையும். அங்ஙனம் செல்லும் அலைகளில் அகப்பட்டவை யாவும் அலைப்புறுவதைக் காணலாம். வானத்திலும் காற்று அலைகள் உண்டு. அவற்றுடன் 'ஈதர்' என்ற ஒரு வகை மிக நுண்ணிய பொருள் கலந்திருக்கின்றது. அப்பொருளுடன் ஒலியை மின்னாற்றலாக மாற்றிக் கலக்குமாறு செலுத்தினல் அஃது ஒரு விநாடிக்குள் உலகமெல்லாம் பரவும். மீண்டும் அதே மின்னாற்றலை ஒலியாக மாற்றலாம். மாற்றிய ஒலியே நாம் கேட்கும் ஒலியாகும்.

வானொலிக்கான கருவிகள் இரண்டு ஆகும். ஒலியை மின்னலைகளாக மாற்றி விண்ணில் ஈதரோடு கலக்கச் செய்யும் பொறி ஒன்று. இது ஒலிபரப்பும் கருவியாகும். மற்றொன்று மின்னலைகளை ஒலியலைகளாக மாற்றி நாம் அவற்றைக் கேட்குமாறு செய்

யும் பொறி. இது ஒலி வாங்கும் கருவி ஆகும். ஒலி பரப்பும் கருவி ஓரிடத்திலேயே நிலையாக அமைக்கப்படுவது. அத்தகைய கருவிகள் நம் தமிழ் நாட்டில் சென்னை, திருச்சி ஆகிய இரண் டிடங்களிலேயே அமைக்கப்பட்டுள்ளன. இவை வானொலி நிலையங்கள் எனப்படும். ஒலி வாங்கும் கருவி நமது வீடுகளில் நாம் வாங்கி வைக்கத் தக்க வானொலிப் பெட்டிகளாகும். இந்த இருவகைக் கருவிகளே நம்மைப் பிறருடன் இசைய வைத்து, இசையைக் கேட்கச் செய்கின்றன.

தற்கால விஞ்ஞான உலகத்திற்கு வானொலி பெரிதும் உதவுகின்றது. இதனால் நீண்டு அகன்று கிடக்கும் நிலப்பரப்புக் குறைந்து காணப்படுகிறது. நாட்டுக்கு நாடு நட்புண்டாகின்றது. இதன் பய னாக மக்கள் வேற்றுமையின்றி ஒற்றுமை பெற்று யாவரும் ஓரினத்தவர் என்ற எண்ணத்துடன் வாழ முற்படுகின்றனர்.

கடலிற் செல்லும் கலங்களும், வானத்தில் பறக் கும் வானவூர்திகளும் வானொலியால் பெறும் பயன் கள் அளவிட முடியாதனவாகும். கடலில் ஆபத் துக்குள்ளாகி இருக்கும் கலங்கள் தம்மிடமுள்ள ஒலி பரப்பும் கருவியால் உலக முழுவதற்கும் செய்தியை அனுப்பி விடுகின்றன. இதனைக் கேட்டதும் வேண் டிய உதவிகள் கலம் இருக்கும் இடத்தை நோக்கிக் கடுகிச் செல்கின்றன. இவ்வாறே வான ஊர்தி களுக்கும் வானொலி உதவுகின்றது. வானவூர்தி புறப் பட்ட இடத்திலிருந்து சேரும் இடம் வரை நீங்காத தொடர்பு கொள்ளச் செய்வது வானொலியே.

போர்க் காலங்களில் வானொலி ஒரு சிறந்த ஒற்றனாகவும் பயன்படுகிறது. ஒற்றன் வெளி நாட்டிலிருந்து அறிந்தவற்றை அங்கிருந்தவண்ணமே நொடிக்கு நொடி தன் நாட்டுக்கு அறிவிக்க இது பயன்படுகின்றது. போர் நடக்கும் இடங்களில் நடைபெறுவனவற்றை அன்றாடம் யாவரும் அறிய பறை சாற்றுவது வானொலியேயாகும். மேலும், வானொலியின் உதவியால் விமானங்களைப் பறக்க விடும் விந்தையையும் நாம் கூடிய விரைவில் கேட்போம் என்று தெரிகின்றது.

வானொலி நம் தோழன்; நமக்கு ஏவலாள்; ஆசிரியன்; உற்றவிடத்தில் உதவும் உபகாரி. நம் சிறுவர்க்கும் சிறுமியர்க்கும் அது செவிலித் தாயாகவும் திகழ்கின்றது. வானொலியின் வழியே பல அறவுரைகளைக் கேட்கலாம். அரிய சொற்பொழிவுகளைக் கேட்டு உடைந்த உள்ளம் உறுதி பெறும். அன்றாடச் செய்திகளையும், விலைவாசிகள் ஆகியவற்றையும் இதன் மூலம் அறிந்துகொள்ளலாம். இஃது இனிய இசை நிகழ்ச்சிகள், கதைகள், நாடகங்கள், கல்விக்கான போதனைகள் ஆகியவற்றை அளிக்கின்றது. சிறுவர் முதல் பெரியோர் வரை யாவர்க்கும் இது பொது நலப் பணியைச் செய்கின்றது என்று சொல்லலாம் அல்லவா ?

இவ்வாறு பல வகைகளிலும் மக்கட்குத் துணை புரியும் வானொலிக் கருவிகளைக் கண்டுபிடித்தவர்களுக்கு நாம் செய்யும் கைம்மாறு யாது? அவர்கள் கண்ட விஞ்ஞான விந்தைக்குரிய வானொலியை நாம் நல்ல வழியில் பயன்படுத்தி நாட்டிற்கேற்ற நன்மக்களாய்த் திகழ்வதேயாகும்.

## அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| வானொலி | விந்தை | கலக்குமாறு | இசைய |
| ஒற்றன் | இசை | அலைப்புறுவது | பரவும் |
| நிலப்பரப்பு | நொடி | பணி | இறுதி |
| கருவிகள் | கலம் | உபகாரி | மின்சாரம் |
| மின்னாற்றல் | மின்னலை | கடுகி | போதனை |
| வானம் | ஈதர் | நிலையம் | ஊர்தி |

## கேள்விகள்

1. வானொலியால் நிகழும் விந்தைச் செயல் யாது ?
2. வானொலி எப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டது ?
3. வானொலியைக் கண்டுபிடித்தவர் யார் ? இவர் கண்டுபிடித்த மற்றொன்று யாது ?
4. நீரில் கல்லெறியும்போது நாம் காண்பது யாது ?
5. விண்ணில் ஒலி அலை எங்ஙனம் பரவி, நாம் கேட்கும் நிலையை அடைகின்றது ?
6. வானொலியின் இரு கருவிகள் யாவை ? அவற்றின் வேலை என்ன ?
7. உலகம் வானொலியால் இணைவது எப்படி ?
8. வானொலி கப்பலுக்கு எப்படி உதவுகின்றது ?
9. வானவூர்திக்கு வானொலி எப்படி உதவும் ?
10. போர்க்காலத்தில் வானொலியின் சேவைகள் யாவை ?
11. வானொலி செய்யும் பொது நலப்பணிகளைக் கூறுக.
12. வானொலியைக் கண்டுபிடித்தவர்க்கு நாம் செய்யும் கைம்மாறு யாது ?

## பயிற்சி

1. உங்கள் வீட்டில் வானொலிப் பெட்டி இருக்கிறதா ? அதில் பள்ளிப் பிள்ளைகளுக்கான கல்வி நிகழ்ச்சிகளை அன்றாடம் கேட்க.
2. ஒலி பரப்பும் நிலையங்கள் நம் இந்தியாவில் எங்கெங்கு இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்க.
3. வானொலி பழுது பார்க்கும் கடைக்குச் சென்று அதனுள் அமைந்திருக்கும் உறுப்புக்களை நோக்குக.
4. ஒலி பரப்பும் நிலையத்திற்கு இன்பப் பயணம் செல்ல ஏற்பாடு செய்து, அதனைக் காண்க.
5. மார்க்கோனியின் முழு வரலாற்றை நூல் நிலையத்தின் உதவியைக் கொண்டு அறிந்து கொள்க.

## இலக்கணம்

### வாக்கியப் பொருத்தம்

நான், யான்—தன்மை ஒருமைப் பெயர்

நாம், யாம்—தன்மைப் பன்மைப் பெயர்

நீ—முன்னிலை ஒருமைப் பெயர்

நீர், நீங்கள்—முன்னிலைப் பன்மைப் பெயர்

தன்மை முன்னிலை அற்ற மற்றப் பெயர்கள் படர்க்கை.

நான் படிக்கிறேன்.

நீ படிக்கிறாய்.

அவன் படிக்கிறான்.

நான்—என்பது ஒருமையில் உள்ள எழுவாய். படிக்கிறேன் என்பது தன்மை ஒருமையில் உள்ள வினைமுற்று.

நீ—என்பது முன்னிலையில் ஒருமையில் உள்ள எழுவாய். படிக்கிருய்—என்பது முன்னிலை ஒருமையிலுள்ள வினைமுற்று.

அவன்—என்பது படர்க்கை ஒருமையில் உள்ள எழுவாய், படிக்கிருன் என்பது படர்க்கை ஒருமையிலுள்ள வினைமுற்று.

மேலே கண்டன போல எழுவாயும் பயனிலையும் பொருத்தமாக இருக்கவேண்டும்.

1. மூவகை வினை முற்றுக்களுக்கும் பன்மையில் உதாரணங்கள் வரைக.

2. கீழே இருப்பவற்றுள் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களைப் பொருத்தி வரைக :

| | | | |
|---|---|---|---|
| (1) | கமலா | ஈதலை | வணங்கு |
| (2) | வள்ளுவர் | பழத்தை | தின்றன |
| (3) | நீ | புல்லை | கண்டோம் |
| (4) | அவன் | பாடலை | நன்றென்ருர் |
| (5) | மாடுகள் | கடலை | ஆடுகிருள் |
| (6) | நடிகை | —— | தின்ருன் |
| (7) | நாங்கள் | கடவுளை | பாடினுன் |

——

# 8. இயேசுநாதரின் உவமைக் கதை

இயேசுநாதர் கிறித்துவ மதத்தை உலகில் நிலை நாட்டிய பெரியோர் ஆவர். அவர் கடவுளின் திருக் குமரனாகக் கிறித்துவர்களால் போற்றப்படுகிறார். அவர் சற்றேறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுக ளுக்குமுன் யூதேயா நாட்டில் பிறந்தார். அவர் தந் தையின் பெயர் சூசைமுனிவர்; தாயின் பெயர் கன்னி மரியாள். இயேசுநாதர் பல உண்மைகளை மக்களுக்குப் போதித்தார். அங்ஙனம் போதித்த



காலத்தில் மக்கள் மனத்தில் அறவுரைகள் பதிய, பல உவமைக் கதைகளைக் கூறினார். அங்ஙனம் கூறிய கதைகளில் ஒன்று பின் வருவதாகும்:-

ஒரு தந்தைக்கு மக்கள் இருவர் இருந்தனர். இளையவன் தன் பாகத்தைப் பிரித்துத் தருமாறு தந் தையைக் கேட்டான். அது பரம்பரைச் சொத்தாத லின் அவர் தம் சொத்தில் மூன்றில் ஒரு பாகத்தைப்

பிரித்துக் கொடுத்து விட்டார். இளையவன் தன் சொத்தை விற்ருன்; பணத்தை எடுத்துக் கொண்டு தொலை நாடு ஒன்றிற்குச் சென்று வசிக்கலாயினன்.

சிறிது காலம் சென்றது. அவன் தன் கைப் பொருளைப் பல வழிகளில் செலவழித்துப் பாழாக்கி ஞன். அந்த நாட்டில் ஒரு கொடிய பஞ்சம் வரவே இளைஞன் வாழ வழியில்லாமல் திண்டாடலானுன். அப்பொழுது அவன் அந்நாட்டிலிருந்த ஒரு குடி யானவனிடம் சென்று வேலைக்கு அமர்ந்தான். குடி யானவன் அந்த இளைஞனுக்குப் பன்றிகளை மேய்க் கும் வேலையைக் கொடுத்து வயல் வெளிக்கு அனுப் பிஞன். அங்கு இளைஞன் உணவின்றித் துன்பப் பட்டான். அவனுக்குப் பன்றிகள் உண்ணும் தவிடும் கிடைக்காமற் போயிற்று.

இளைஞன் தன்னிலையை உணர்ந்தான். "என் தந்தையிடம் எத்துணை வேலையாட்கள் வேலை செய்கின்றனர்! அவர்கட்கு நிறையக் கொடுத்துங் கூட அவரிடம் உணவு எஞ்சி இருக்கிறதே! இங்கே நான் இப்படி உணவின்றித் துடிக்கின்றேனே" என்று எண்ணலானுன். "நான் என் தந்தையிடம் போகிறேன். அவரிடம் தங்களுக்கும் கடவுளுக்கும் பொறுக்காதனவற்றைச் செய்து பாவியானேன். இனி மேல் நான் தங்களுக்கு மகன் என்று கூற முடியாது. என்னைத் தங்களிடம் ஒரு கூலியாளாக அமர்த்திக் கொள்ளுங்கள் என்பேன்," என்று தனக்குள் தானே கூறிக்கொண்டான்.

அவன் உடனே புறப்பட்டுத் தந்தையின் ஊரை அடைந்தான். வீட்டிற்கு நெடுந் தொலைவில் அவன் வரும்போதே தந்தை அவனிடம் ஓடினுர்.

அன்புடன் அவனைக் கட்டித் தழுவினார்; முத்த மிட்டார். இளைஞன், "தந்தையே! நான் தங்கள் கண் முன்னரேயே கடவுளுக்கும், உமக்கும் பொறுக் காதனவற்றைச் செய்து பாவியாகி விட்டேன். இனி நான் தங்கள் மகன் என்று கூறத் தகுதியற்றவன் ஆனேன்," என்று மனம் வருந்திக் கூறினான்.

ஆனால் தந்தையோ, தன் வேலைக்காரர்களை அழைத்தார். தன் மகனுக்குப் புதிய உடுப்புக்களைக் கொடுக்கச் சொல்லி அணிவித்தார். அவன் விரலுக்கு மோதிரமும் கால்களுக்குச் செருப்பும் அணிவித்தார். வேலைக்காரர்களிடம், "என்னுடைய இளைய மகன் இறந்தவனாயிருந்து இப்போது பிழைத்து விட்டான்; காணாமற் போனவன் கண்டு பிடிக்கப்பட்டான். எனவே, நல்ல விருந்துக்கு ஏற்பாடு செய்யுங்கள். யாவரும் உண்டு மகிழ்ச்சியாயிருங்கள்," என்று கட்டளையிட்டார்.

மூத்தவன் வயலிலிருந்து வீடு திரும்பினான். அவன் வீட்டினருகே வருவதற்கு முன்னரே ஆட்ட மும் பாட்டும் அவனைத் திகைக்க வைத்தன. ஒரு வேலைக்காரனை அழைத்து விருந்து நடப்பதன் காரணத்தை வினவினான். அவன், "தங்கள் தம்பி திரும்பி வந்திருக்கின்றான். அவன் தீங்கு ஒன்று மின்றி வந்ததை முன்னிட்டு, உம் தந்தை விருந்து நடத்துகின்றார்" என்றான். மூத்தவனுக்குச் சினம் மூண்டது. வீட்டினுள்ளே செல்ல விரும்பாமலிருந் தான். அப்போது அவன் தந்தை வெளியே வந்து அவனை உள்ளே வருமாறு வேண்டினார். மூத்தவன் தந்தையை நோக்கி, "நான் இத்துணை யாண்டுகள் உமது கட்டளைக் கடங்கி உமக்குச் சேவை செய்து

வந்தேன். ஒரு முறைகூட நான் என் நண்பர்களோடு விருந்துண்டு களிக்க ஒன்றும் கொடுக்கவில்லை. இப்போது வந்துள்ள உம் மகன் உம் பொருளையெல்லாம் கெட்டவர்களோடு கூடி அழித்தவன். அவனுக்காக இப்போது ஒரு பெரிய விருந்து நடக்கிறதல்லவா?'' என்று கோபத்துடன் கேட்டான்.

தந்தை, "மகனே, நீ என்னுடன் எப்போதும் இருக்கிறாய். என்னுடையன யாவும் உன்னுடையயனவே. ஆனால் உன் தம்பி இறந்தவனாயிருந்து உயிருள்ளவன் ஆனான். காணாமற்போனவனாயிருந்து அகப்பட்டவன் ஆனான். ஆகையால், நாம் மகிழ்வுடன் இந்த நாளைக் கொண்டாடிக் களித்தல் முறையானதாகும்'' என்று கூறினார்.

இந்த உவமைக் கதையைக் கூறி இயேசுநாதர், 'குற்றம் செய்தவன் மனமாரக் குற்றத்திற்கு வருந்தினால் கடவுள் அவனை மன்னிப்பார்' என்பதை எடுத்துக் காட்டினார்.

அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| கிறித்துவமதம் | பரம்பரை | உடுப்புக்கள் | சினம் |
| நிலை நாட்டு | பஞ்சம் | விருந்து | யாண்டுகள் |
| யூதேயா | எஞ்சி | ஏற்பாடு | சேவை |
| போதித்து | பொறுக்காத | கட்டளை | களித்தல் |
| உவமை | பாவி | திகைக்க | கொண்டாடி |

கேள்விகள்

1. கிறித்துவ மதத்தைத் தோற்றுவித்தவர் யார்? அவரது வரலாற்றை வரைக.
2. உவமைக் கதையால் ஏற்படும் நன்மை யாது?

3. இளைய மகன் துன்பப்பட நேர்ந்தது எதனால்? பட்ட துன்பம் யாது?
4. இளைய மகன் தந்தையிடம் திரும்பி வந்து வேண்டிக் கொண்டது யாது?
5. தந்தை அவனை வரவேற்றது எப்படி? அவனுக்கு விருந்து நடத்தியதேன்?
6. மூத்த மகன் தந்தையிடம் முறையிட்டது யாது?
7. தந்தை மூத்தவனுக்கு உரைத்தது யாது?
8. இந்த உவமைக் கதையால் நாம் அறிவது யாது?

### பயிற்சி

1. கிறித்துவ மதத்தின் வேதம் விவிலிய நூல் ஆகும். இந்தக் கதை அந்நூலில் உள்ளது. இது போன்ற இரு கதைகளை ஆசிரியரிடம் கேட்டு அறிக.
2. இக்கதையை இளையவன் கூறுவது போல் வரைக.

பொருள் கூறுக :— அறவுரை, எஞ்சி, திகைக்க, சினம்.

வாக்கியத்தில் அமைத்து எழுதுக:— சற்றேறக் குறைய, வாழ வழி, முன்னிட்டு, மனமார.

கீழ் வருவனவற்றிற்கு எதிர்ப்பதம் எழுதுக .— பெரியோர், சிறிது காலம், பஞ்சம், வருந்தி.

கவனித்துக்கொள்க :— தன்னிலை — தன் + நிலை ; வீட்டினருகே = வீட்டின் + அருகே.

### இலக்கணம்

சிலர் தவறாகப் பேசுவர். பேச்சுப் போலவே எழுதுவதும் உண்டு. அங்ஙனம் தவறாகப் பேசுதலையும் எழுதுதலையும் அறிஞர் வழூஉ என்பர். வழூஉ என்பது

குற்றம். ஒரு சில வழூஉக்களையும் அவற்றின் திருத்தங்களையும் கீழே காண்க: பிறவற்றை நும் ஆசிரியர் சுட்டிக் காட்டுவார்.

| தவறுனவை | சரியானவை |
|---|---|
| எண்ணை | எண்ணெய் |
| வெண்ணை | வெண்ணெய் |
| உத்திரவு | உத்தரவு |
| கெடிக்காரம் | கடிகாரம் |
| கோர்வை | கோவை |
| ஜாமான் | சாமான் |
| திருவிஷா | திருவிழா |
| ரொம்ப | நிரம்ப |
| பாவக்காய் | பாகற்காய் |
| கத்திரிக்காய் | கத்தரிக்காய் |
| சுந்திரம் | சுந்தரம் |
| வெங்கடசாமி | வேங்கடசாமி |
| வலது பக்கம் | வலப்பக்கம் |
| வாவரசி | வாழ்வரசி |
| சுவற்றில் | சுவரில் |
| ஆத்துக்கு | ஆற்றுக்கு |
| திங்கிருன் | தின்கிருன் |
| தின்னுட்டு | தின்றுவிட்டு |
| தண்ணி | தண்ணீர் |
| அருகாமை | அருகு |
| ஆக்ஷி | ஆட்சி |
| காக்ஷி | காட்சி |
| மாக்ஷி | மாட்சி |
| இடது பக்கம் | இடப்பக்கம் |
| நஞ்சை | நன்செய் |
| புஞ்சை | புன்செய் |
| மச்சான் | மைத்துனன் |
| கார்த்தான் | காத்தான் |

# 9. இன்பச் செலவு

மக்கள் கல்வி கற்பது மட்டும் போதாது; உலக அறிவும் பெறுதல் வேண்டும். அதனை உலகியல் என்பர். அதனைப் பெற ஒவ்வொருவரும் வெளியி டங்களைக் காணவேண்டும். கிணற்றுத் தவளையைப் போல் இருப்பவர்கள் உலகியல் அறிவைப் பெற முடியாது. அங்ஙனம் அறிவைப் பெறுவதற்கு ஏற்ற காலம் இளமையேயாகும்.

கல்வி கற்கும் மாணவர்கள் தங்கள் பாட நூல் களில் பலவற்றைப் பற்றிக் கற்பர். சமூக நூல், மக் கள் சமூகத்திற்கு வேண்டியவற்றை யெல்லாம் கற் பிக்கும்; வரலாறு, சிற்பம், இசை முதலியவற்றை யெல்லாம் கூறும்; கூறுங் காலத்தில் அவை சிறப் புற்று விளங்கிய இடங்களைக் கூறும். பாடங்களில் படித்தவற்றைக் கண்ணால் கண்டால் அவை மாண வர்கள் மனத்தில் நன்கு பதியும். இதனாலேயே ஒவ் வொரு பள்ளியிலும் மாணவர்கள் இன்பச் செலவை மேற்கொள்ளுகிறார்கள். இன்பச் செலவினால் அவர் கள் மகிழ்ச்சி அடைகிறார்கள். புகைவண்டியிலோ அல்லது மோட்டாரிலோ சென்று பிற விடங்களைக் காண விரும்பாதவர்கள் எவர் ? பிற விடங்களைக் காணுவதால் மகிழ்வும், அறிவும் ஒருங்கே பெற முடியும். இங்குச் சேலம் நகராண்மைக் கழக உயர் நிலைப்பள்ளி மாணவர்கள் மேற்கொண்ட ஓர் இன்பச் செலவைக் குறித்து அம்மாணவருள் ஒருவன் கூறுவதைக் காண்க:

"நான் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளி யில் படிக்கும் மாணவன். என் பெயர் தமிழரசன்.

எங்கள் தலைமை ஆசிரியர் ஒருநாள் எங்கள் பள்ளி மாணவர் கூட்டத்தில் இன்பச் செலவு என்பதைப் பற்றிப் பேசினர். பின்னர் இன்பச் செலவுக்கு வர விருப்பமுள்ளவர்கள் தம்மிடம் பெயர் கொடுக்கலாம் என்று கூறிவிட்டுச் சென்றார். ஐம்பது மாணவர்கள் பெயர்களைக் கொடுத்தனர். அவர்களில் நானும் ஒருவன். ஆசிரியர்கள் ஐவர் வருவதாகப் பெயர்களைக் கொடுத்திருந்தனர்.

மறுநாள் நாங்கள் ஐம்பத்தைந்து பேரும் தலைமையாசிரியரும் சேர்ந்து இன்பச் செலவுக்குரிய இடத்தைப்பற்றி எண்ணினோம். ஆழ்ந்த ஆலோசனைக்குப் பிறகு சிதம்பரம் செல்வதென்று முடிவு செய்தோம். தலைமையாசிரியர் வழியில் தங்கும் இடங்கள், பார்க்கவேண்டிய இடங்கள், உணவு வசதி ஆகியவற்றைக் கவனிப்பதாக ஏற்றுக்கொண்டார். பின்னர் எங்களை ஐந்து பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவையும் ஒவ்வோர் ஆசிரியன் மேல்பார்வையில் இருக்குமாறு அமைத்தார். ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு மாணவத் தலைவன் தேர்ந்தெடுக்கப்பட்டான். என் பிரிவுக்கு நான் தலைவனயிருந்தேன்.

புறப்படுவதற்கு ஒரு வாரத்திற்கு முன்னர் மறுமுறையும் கூடினோம். இன்பச் செலவிற்குக் கட்ட வேண்டிய தொகை, உடன் கொண்டுவரத்தக்க பொருள்கள் ஆகியவற்றைத் தலைமையாசிரியர் விரிவாகக் கூறினர்; காண்பனவற்றைக் கவனித்துக் குறிப்பெடுத்துக் கொள்ள வேண்டும் என்பதையும் கூறினர். அவரவர் பொருள்களை அவரவரே எடுத்துச்

செல்லும் அளவே சாமான்களைக் கொண்டு வர வேண்டும் என்றும் எச்சரித்தார்.

குறிப்பிட்ட நாளும் வந்தது. காலை 6 மணிக்குச் சேலம் சந்திப்பிலிருந்து புறப்படும் புகை வண்டிக் கென ஐந்து மணிக்கே நாங்கள் புகை வண்டி நிலை யத்தை அடைந்தோம். அவ்வண்டியில் எங்களுக் கெனவே ஒரு தனிப்பெட்டி ஒதுக்கப்பட்டிருந்தது. வண்டியில் ஏறினோம். சாமான்களைச் சமான்களுக் கெனவிருந்த இடங்களில் வைத்துக் கொண்டோம். வண்டியும் புறப்பட்டது. எங்களை வண்டியிலனுப்ப வந்தவர்களிடம் விடை பெற்றுக் கொண்டோம். வண்டியில் பாடினர் சிலர்; கூடிப் பேசினர் பலர். காலைக் கதிரவன் ஒளியில் இயற்கையைக் கண்டு களித்தனர் சிலர்.

பகல் பன்னிரண்டரை மணிக்கு வண்டி விருத்தா சலத்தை அடைந்தது. நிலையத்தில் எங்களுக்காக ஒரு மோட்டார் வண்டி காத்துக்கொண்டிருந்தது. யாவரும் அதில் ஏறிக்கொண்டோம். கோவிலுக்கு அருகில் இருந்த ஒரு சத்திரத்தில் இறங்கினோம். கோவிலுக்கு எதிரே ஓர் ஆறு இருக்கிறது. அங்குச் சென்று ஆற்றில் குளித்துவிட்டுக் கோவிலுக்குள் நுழைந்தோம். அக்கோவில் மிகவும் பழமையானது. இவ்வூரின் பெயர் பழமலை என்றும், முதுகுன்றம் என்றும் வழங்கியதாகவும் பின்னரே விருத்தாசலம் என மாறிவிட்டதாகவும் முதியோர் சிலர் கூறினர். அங்குள்ள சிவபெருமானின் பெயர் பழமலை நாதர். அக்கோவிலிலுள்ள சிற்பங்களைக் கண்டுகளித்தோம். குறிப்பெடுத்துக் கொண்டும் சிற்பங்களை வரைந்து

கொண்டும் இருந்தனர் ஒரு சிலர். நானும் என் நண்பன் மணிமொழியும் ஒரு சில காட்சிகளைப் புகைப் பட மெடுத்துக்கொண்டோம். தலைமையாசிரியரது ஊதுகுழல் ஒலித்தது. உடனே சத்திரத்திற்கு விரைந்து சென்று பகலுணவை உண்டோம்; சற்றுப் பேசி மகிழ்ந்து இளைப்பாறினோம்.

விருத்தாசலத்திலிருந்து சாலை வழியே சென்றால், இருபத்தொன்பதாவது கல்லில் சிதம்பரம் இருக்கிறது. எங்கள் தலைமையாசிரியர் இரண்டு பெரிய மோட்டார்களைக் கொண்டு வர ஏற்பாடு செய்திருந்தார். எங்கள் செலவு மோட்டார்களில் தொடங்கியது. பாதையின் இருபுறங்களிலும் செழித்து வளர்ந்துள்ள பயிர்களைக் கண்டவாறே நாங்கள் சென்றோம். பாதையின் பக்கங்களில் பல குழாய்க் கிணறுகள் பூமியிலிருந்து நீரை மேலே ‘குபுகுபு’ வென்று எழுப்பிக்கொண்டே இருந்தன. மோட்டார் வண்டிகளை நிறுத்தச் செய்து அக்காட்சியைச் சிறிது பொழுது கண்டவண்ணம் அசைவற்று நின்றோம். இத்தகைய குழாய்க் கிணறுகள் சேலத்தில் இல்லாதது ஏன் என்று எங்கள் பிரிவு ஆசிரியரை நான் கேட்டேன். சேலம் கடல் மட்டத்திற்கு மிகவும் உயர்ந்ததென்றும், பூமி இறுகிய பாறைகளால் அமைந்ததென்றும். அதனாலேயே இது போன்ற குழாய்க் கிணறுகள் அங்குத் தோன்ற மாட்டா என்றும் அவர் கூறினார்.

மாலை ஆறு மணிக்கு நாங்கள் சிதம்பரம் நகரை அடைந்தோம். சிதம்பரத்தில் உள்ள இராமசாமி செட்டியார் உயர்நிலைப்பள்ளியில் இரவு தங்குவதற்காக இறங்கினோம். அந்தப் பள்ளித் தலைமையா



சிரியர் எங்களே வரவேற்று எங்களுக்கென்று ஒதுக்கி வைத்துள்ள இடத்தைக் காட்டினர். மாலேச் சிற்றுண்டியருந்த எங்களே வருமாறு அழைத்தார். அவர் விரும்பியவறு நாங்கள் சிற்றுண்டி அருந்திளேம்.

சிதம்பரம் ஓர் அழகிய ஊர். அவ்வூரில் பல கோவில்கள் இருக்கின்றன. பல அறநிலேயங்கள் இருக்கின்றன. பல கல்விச்சாலேகள் இருக்கின்றன. வடமொழி வேதம், தென் தமிழ் மறை ஆகியவற்றைக் கற்பிக்கும் இடங்கள் இருக்கின்றன. நகருக்கு நடு நாயமாக அமைந்திருப்பது நடராசர் கோவில். நடராசர் கோவிலேச் சுற்றிலும் நான்கு அகன்ற தெருக்கள் இருக்கின்றன. கோவிலின் சுற்றுச் சுவர்களில் நான்கு மிகப் பெரிய கோபுரங்கள் உள்ளன. அந்தக் கோபுரங்களில் பல சிற்பங்கள் அமைந்துள்ளன. அவை நம்மை வரவேற்கின்றன.

மறுநாட் காலேயில் நாங்கள் மோட்டார் வண்டிகளில் ஏறினேம். மோட்டார்கள் விண்ணே அளாவும் மாடமாளிகைகள் நிறைந்த ஒரு புதிய நகரில் கொண்டு போய் எங்களே விட்டன. நாங்கள் கீழே இறங்கினேம். சுற்றுப் புறங்களில் சோலேகள் இயற்கை அழகைச் சொரிந்தன. இந்த இடம்தான் **அண்ணுமலே நகர்** என்பதை அறிந்தோம். அங்குத்தான் **அண்ணுமலேப் பல்கலேக் கழகம்** அமைந்திருக்கிறது என்பதையும் அறிந்தோம்.

எங்கள் தலேமை ஆசிரியருடன் ஒருசேரப் படித்த ஓர் ஆசிரியர் எங்களே வரவேற்று அழைத்துச் சென்ருர்; இசைக் கல்லூரி, செந்தமிழ்க் கல்லூரி, வட மொழிக் கல்லூரி, கலேக் கல்லூரி, பொறியியல் கல்லூரி ஆகியவற்றைச் காட்டினர்; அங்கு

நடைபெறுவனவற்றையெல்லாம் விவரித்துக் கூறி ஞர். உயர்தரக் கல்வி முடிந்ததும் ஒவ்வொருவரும் அண்ணுமலைப் பல் கலைக் கழகத்திலேயே படிக்க வேண்டும் என்று நாங்கள் தீர்மானித்துக் கொண் டோம்.

அண்ணுமலைப் பல்கலைக் கழக மாணவர் விடுதி யினர் எங்களை வரவேற்று மாலைச் சிற்றுண்டி வழங் கினர். தலைமையாசிரியர் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார். எங்கள் மோட்டார் வண்டிகள் எங் களை ஏற்றிக் கொண்டு புறப்பட்டன. மீண்டும் விருத்தாசலம் வழியாகவே சேலம் வந்து அடைந் தோம். வழி முழுவதும் எங்களிடை, அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தை ஏற்படுத்திய அண்ணுலை அரசர் பேச்சாகவே இருந்தது. எங்கள் தலைமை யாசிரியர் அண்ணுமலை அரசரது வரலாற்றைக் கூறிக் கொண்டே வந்தார்; அண்ணுமலை அரசர் புகழ் என்றும் அழியாதென்றும், அவரைப்போல மக்கள் யாவரும் வாழ வேண்டுமென்றும் எடுத் துரைத்தார்.

நாங்கள் சென்றுவந்த இந்த இன்பச் செலவின் நினைவு இன்னும் எங்கள் மனத்தைவிட்டு அகல வில்லை. கொடை வள்ளலான அண்ணுமலை அரச ரது புகழ் என்றும் நின்று ஓங்குவதாகுக."

## அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| உலகியல் | இறுகிய | சந்திப்பு | அசைவற்று |
| சமூகம் | ஒருங்கே | குதூகலம் | அறநிலையம் |
| வரலாறு | ஆலோசனை | கதிரவன் | ஒருசேர |
| சிற்பம் | முதுகுன்றம் | ஊதுகுழல் | வாழ்க்கை |
| இயங்கி | எச்சரித்தல் | குழாய்க்கிணறு | கொடை |

## கேள்விகள்

1. உலக அறிவைப் பெறுவது எப்படி? யார் அதைப் பெற முடியாது?
2. இன்பச் செலவை மாணவர்கள் மேற்கொள்ளுவதேன்?
3. 'இன்பச் செலவைத்' தலைமையாசிரியர் எங்ஙனம் தோற்றுவித்தார்?
4. இன்பச் செலவுக்கான கூட்டங்களின் அவசியமென்ன?
5. தமிழரசன் சென்ற வண்டியில் மாணவர் எங்ஙனம் களித்தனர்?
6. விருத்தாசலத்தில் இன்பச் செலவினர் கண்டவை யாவை?
7. பழமலையில் இன்பச் செலவினர் இருபுறமும் கண்ட காட்சிகள் யாவை?
8. குழாய்க் கிணறுகள் சேலத்தில் இல்லாமைக்குக் காரணம் யாது?
9. சிதம்பரத்தைப்பற்றி நீவிர் அறிந்ததை வரைக.
10. அண்ணாமலை நகரைப் பற்றிச் சுருக்கி வரைக.

## பயிற்சி

1. நீ சென்ற ஓர் இன்பச் செலவைப் பற்றி உன் நண்பனுக்குக் கடிதம் எழுதுக.
2. புகை வண்டியில் செல்வது, மோட்டாரில் செல்வது - இவற்றுள் எது சிறந்தது? ஏன்?
3. விருத்தாசலம், சிதம்பரம் ஆகிய நகரங்களைப் பற்றி அறிந்து கொள்.

## இலக்கணம்

கண்ணன் கண்டான்.
கண்ணனைக் கண்டேன்.
கண்ணனால் காணப்பட்டது.
கண்ணனுக்குக் காட்டு.
கண்ணனில் கரியவன்.
கண்ணனது புத்தகம்.
கண்ணனிடம் இருந்தது.
கண்ணா ! வா.

கண்ணன் என்ற சொல்லை ஒவ்வொரு வாக்கியத்திலும் நோக்குக. அச்சொல்லுடன் ஐ, ஆல், கு, இல், அது, இடம் முதலிய உருபுகள் சேர்ந்துள்ளன. இவற்றை வேற்றுமை உருபுகள் என்பர். கண்ணன் என்ற சொல் அழைக்கும் பொருளில் கண்ணா! என்று மாறி இருக்கிறது.

இயல்பான ஒரு சொல்லின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமை. இதற்கு உதவுவன வேற்றுமை உருபுகள். வேற்றுமை எட்டு வகைப்படும். முதல் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் உருபு இல்லை.
பெயர்ச் சொல்லின் இயல்பே முதல் வேற்றுமை.

| | | | |
|---|---|---|---|
| ஐ என்பது | இரண்டாம் | வேற்றுமை | உருபு. |
| ஆல், ஒடு, ஓடு, உடன் | மூன்றாம் | ,, | ,, |
| கு | நான்காம் | ,, | ,, |
| இன், இல் | ஐந்தாம் | ,, | ,, |
| அது, ஆது, அ | ஆறாம் | ,, | ,, |
| இல், இடம், கண் முதலியன | ஏழாம் | ,, | ,, |

படர்க்கையில் இருக்கும் பெயர்ச் சொல்லை முன்னிலைப் பொருளில் வர விளிப்பதே எட்டாம் வேற்றுமையாகும். இதற்கு **விளிவேற்றுமை** என்றும் ஒரு பெயருண்டு.

# 10. சிற்பங்கள்

கலைகள் அறுபத்து நான்கு என்று நம் நாட்டு நூல்கள் கூறும். இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலியன அவற்றுள் அடங்கும். மக்கள் அநுபவித்து உணரத்தக்கனவே கலைகள். இவற்றின் இயல் இன்னதென்று சொல்லால் சொல்ல இயலாது.

இயற்கைப் பொருள்களைக் கண்டு மகிழாதவர் இல்லை. கவிஞன், ஓவியக் கலைஞன், சிற்பி ஆகிய இவர்கள் இயற்கையைக் கண்டு சுவைப்பது போல் பாமரன் சுவைக்க முடியாது. இயற்கையைக் காணும் கவிஞன் தான் உணர்ந்ததைக் கவிகள் மூலம் உலகினருக்கு எடுத்துரைக்கின்றான். ஓவியக் கலைஞன் தன் ஓவியத் திறமையால் உலகினரைத் திகைக்க வைக்கின்றான். சிற்பி இவர்களுக்குமேல் ஒருபடி சென்று என்றும் அழியாச் சிற்பமாகப் படைத்துவிடுகின்றான்.

ஓவியத்தின் உடன் பிறப்பே சிற்பம் ஆகும். ஓவியம் வரையப்படுவது. சிற்பம் செதுக்கப்படுவது. ஓவியப் புலவன் தான் கருதியதைக் கற்பனைக் கண்ணுடன் காண்கிறான். தூரிகைகளும் வண்ணங்களும் அவன் சொற்படி கேட்கின்றன. ஓவியம் உயிர் பெறுகிறது. சிற்பக் கலைஞன் ஒரு பெரிய மரத் துண்டு அல்லது கல் அல்லது மலை ஆகிய இவற்றைக் காணும்போதே அவற்றினுள் அடங்கிக் கிடக்கும் உருவம் அவன் அகக்கண்முன் தோன்றுகிறது. ஏதோ ஒரு சில கோடுகளை வரைகின்றான். உளி வேலை செய்கிறது. தான் கருத்தால்

கண்டதை யாவரும் காண அமைத்து விடுகிருன். அஃது இயற்கைப் பொருளோடு போட்டியிட்டு எது பொருள் ? எது சிற்பம் ? என்று காண்பவர் மயங்கும் வண்ணம் அமைந்து விடுகின்றது. இத்தகு வல்லமை பெற்ற சிற்பியே கலையின் அருள் பெற்றவனுவான்.

ஒருவன் சென்னையில் தேனும்பேட்டை காங்கிரஸ் திடலில் அமைக்கப்பட்ட பொருள் காட்சிக்கு ஒரு முறை சென்றிருந்தான். அங்குப் பல பொருட்களையும் பார்த்துக் கொண்டே வந்தவன், ஒரு காட்சிச் சாலையில் ஒரு சிலர் உட்கார்ந்திருந்ததைக் கண்டான். இவர்கள் ஏன் இங்ஙனம் உட்கார்ந்துள்ளனர் என்பதை அறிய உள்ளே நுழைந்தான். அந்தோ ! அவன் ஏமாற்றப்பட்டான். சிற்பக்கலையில் தேர்ந்த ஒரு சிற்பியால் அமைக்கப்பட்ட உருவங்கள் அவை. ஒன்று அரசாங்கச் சேவகன் உருவம். மற்ருென்று போலீஸ் சேவகன் உருவம். இன்னுென்று தபால்காரன் உருவம். மேலுமொன்று தலைப்பாகையுடன் நிற்கும் நாட்டுப்புறத்தான் உருவம். உயிருள்ள மனிதர்கள் போல இவ்வுருவங்கள் காட்சியளித்தன. இயற்கைக்கு இயைய இருந்த அச்சிற்பங்களுக்கு உயிர்ப்பும் உண்டு என்று எண்ணும் வண்ணம் அவை அமைந்திருந்தன.

இத்தகைய சிற்பங்களை இயற்றுவதில் வல்லமை பெற்ற சாலிவாகனன் என்பான் மண்ணுல் செய்த போர் வீரர் உருவங்களைக் கொண்டு பகைவரை வென்றதாக ஒரு கதை வழங்குகிறது. சிற்பக்கலையின் இலக்கணங்களைச் செம்மையாக

அறிந்த சிற்பி, கற்பனையில் கருதிய யாவற்றையும் சிற்பங்களாகச் செதுக்கும் திறமையைப் பெற்றவனு கின்ருன். இயற்கையை வெல்லும் வாய்ப்பும் அவனுக்கு உண்டாகின்றது.

ஒவ்வொரு நாட்டிலும் இக்கலை அவ்வந் நாட்டிற்கேற்ற வண்ணம் தோன்றி வளர்ந்திருக்கின்றது. சீனு, ஜப்பான், உரோம் ஆகிய நாடுகளில் சிற்பக் கலை பண்டைக் கால முதலே சிறந்தோங்கியுள்ளது. எனினும், நம் நாட்டுச் சிற்பக் கலையைச் சிற்பக் கலையின் கொடுமுடி என்றே உலக மக்கள் யாவரும் புகழ்கின்றனர். வட நாட்டில் உள்ள ஆக்ராவில் கட்டப்பட்டுள்ள தாஜ்மகாலைப் பற்றி அறியாதார் யார் ? அஃது உலகப் புகழ் பெற்றது ; சிற்பத் திறம் மிக்கது.

நம் நாட்டில் சிற்பக்கலை பெரும்பாலும் கோவில் களிலேயே பெருகி வளர்ந்துள்ளது. சிற்பக் கலையின் அருமையை உணர்ந்த நம் ஆன்ருேர்கள் அழியா மல் நிலைத்திருக்கும் ஆண்டவன் இல்லத்தையே அழகு படுத்த விரும்பினுர்கள். மரநிழலில் வைத்து வணங்கிய கடவுளின் உருவைக் கோபுரங்கள் கூடிய கோவிலில் வைத்துப் போற்றலாயினர். மண்ணு லும் மரத்தாலும் கட்டப்பட்ட கோவில்கள் மறைய லாயின. அவை மலைகளைக் குடைந்து அமைக்கப் பட்டன. பல்லவ மன்னர்கள் இத்தகைய குடை வரைக் கோவில்களைக் கட்டியுள்ளனர். நாமக்கல், திருச்சிராப்பள்ளி, திருவெள்ளரை, குடுமியாமலை முதலிய இடங்களில் இன்றும் இவற்றைக் காண லாகும். இவை சிற்பக் கலையின் சேமநிதியாகக் கூறத்தக்கன. கைத்திறன் படைத்த கலைஞர்களால்

ஒவ்வொரு பாறையும் ஒவ்வோர் உயிரோவியமாகத் திகழ்கின்றது. ஒரு சிற்பி அமைத்த தூண் ஒன்றில் மெல்லத் தட்டினுல் எழுவகை இசையொலிகள் உண்டாகின்றன. அத்தூணின் சிறப்பை எங்ஙனம் கூறவியலும்?

சிற்பக்கலையின் பெருமையைக் கோவிலில் அமைந்துள்ள கோபுரங்கள், தூண்கள், துவார



குடைவரைக் கோவில்

பாலகர்கள் ஆகிய இவற்ருல் அறியலாகும். மாமல்லபுரம், தஞ்சை, மதுரை, தாடிக் கொம்பு, தாரமங்கலம் ஆகிய இடங்களில் உள்ள கோவில் கள் சிற்பத்திறம் மிக்கவை. கற்றூண்களில் செதுக் கிய சிங்கத்தின் வாயினுள் கல்லுருண்டை உருள் வது, இரும்புச் சங்கிலிகளே என்று கூறும் வண் ணம் கற்சங்கிலிகள் ஊசலாடுவது ஆகிய சிற்பங் கள் கருத்தைக் கவர்வனவாகும். மாமல்லபுரத்தில்

உள்ள ஒற்றைக் கல் கோயில்கள், பாறைகளில் காணப்படும் பண்டைப் புராணச் சிற்பங்கள் ஆகியன சிற்பக்கலையின் சிகரமெனக் கூறலாம்.

மேனாட்டினர் நம் நாட்டு நடராஜர் உருவத்தைச் சிற்பக் கலையின் மலை என்று போற்றுகின்றனர். அவர்களில் பலர் தம் தாய்நாடு சென்ற பொழுது நம் நாட்டுச் சிற்பங்கள் பலவற்றைக் கொண்டு சென்றனர். அந்நாட்டுக் கலையறிஞர் பலரும் இவ்வுருவைப் போற்றி, இதனுள் அமைந்துள்ள சீரிய கருத்துக்களைக் கூறிப் போற்றுகின்றனர்.

சிற்பங்களைக் கற்களில் மட்டுமேயன்றி உலோகங்களிலும் நம்மவர் அமைத்திருக்கின்றனர். ஐந்து கனிப் பொருள்களில் இறைவனின் திருவுருவங்கள் அமைக்கப்படுகின்றன. மேலும் வெண்கலம், தாமிரம், பித்தளை ஆகியவற்றாலும் இவை அமைக்கப்படுகின்றன. இத்தகைய வளம் பெற்ற இக்கலை பண்டை மன்னர்களின் பேராதரவினால் வளர்ந்தது.

சிற்பக் கலையால் நாம் அடையும் பயன்கள் பல. இது, நம் ஆன்றோர் கட்டிய பல கோயில்களை நமக்கு அளித்துள்ளது; அவர்கள் காலத்து நாகரிகத்தை ஒருவாறு அறிய உதவுகிறது; அக்காலத்துச் சிறப்புற்றோங்கிய நடனக் கலையின் பல அம்சங்களை நாமறியச் செய்கின்றது. சிதம்பரம் கோவிலிலுள்ள சிற்பங்கள் பல, பரத நாட்டியத்தின் பண்பை எடுத்தோதுகின்றன. மேலும், அவை பண்டைப் புராதன வரலாற்றை எடுத்துக் காட்டுகின்றன. மாமல்லபுரத்தில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்களால் புராணக் கதைகளை அறிந்தவர் பலராவர்.

பல்லவர்கள், சோழர்கள் ஆகிய மன்னர்களாலும், கொடைவளம் மிக்க வள்ளல்களாலும் இக்கலை ஆதரித்துக் காப்பாற்றப்பட்டது. நெடுங்கால முதற்கொண்டு வளர்ந்து வரும் இந்தக் கலையைப் போற்றி வளர்ப்பது நம் கடமையாகும். சிற்பங்கள் நிறைந்து விளங்கும் இடங்களுக்கு, வாய்ப்பு நேரும் போதெல்லாம் நாம் செல்லவேண்டும்; கண்குளிரக் கண்டு மனதார எண்ணி வாயாரப் பேச வேண்டும். இக்கலையில் வல்லுநர்களை ஊக்குவதற்கு ஆனவற்றை இயன்றவரை செய்யவேண்டும். இங்ஙனம் செய்வதால் பண்டைய நாட்டுப் பழங் கலை என்றும் வளர்ந்து விளங்க உதவி புரிந்தவர் ஆவோம்.

## அருஞ்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| கலைகள் | சிற்பம் | வாய்ப்பு | புராதனம் | புராணம் |
| இயல்பு | கவர்வன | வரலாறு | சுவைத்து | போட்டி |
| சீரிய | வள்ளல் | கற்பனை | காட்சிச்சாலை | சான்றோர் |
| ஒளிர்ந்து | சிகரம் | ஓவியம் | திகழ்ந்தது | வல்லுநர் |

## கேள்விகள்

1. கலைகள் எத்தனை? அவற்றுள் அடங்குவன யாவை?
2. கலை என்றால் என்ன?
3. இயற்கையைச் சுவைப்பவர் இயல்புகள் யாவை?
4. ஓவியம் எங்ஙனம் வரையப்படுகிறது?
5. சிற்பி எங்ஙனம் சிற்பத்தைச் செதுக்குகிறான்?
6. தேனும்பேட்டை சிற்பங்களின் அழகு யாது?
7. சாலிவாகனன் சிற்பங்களைக் கொண்டு செய்ததென்ன?
8. சிற்பிக்கு உண்டாகும் வல்லமை யாது?

9. சிற்பங்கள் பிறநாடுகளில் எவ்வாறுள்ளன ? வட நாட்டிலுள்ள சிறந்த கட்டடம் யாது?

10. நம் நாட்டுச் சிற்பக்கலை எங்குக் காணலாம் ?

11. சிற்பக்கலை பெருகியுள்ள நம் நாட்டு ஊர்கள் யாவை ?

12. பல்லவ மன்னர்களின் குடைவரைக் கோவில்கள் உள்ள இடங்களைக் கூறுக.

13. சிற்பத் திறம் மிக்க தென்னாட்டுக் கோவில்கள் உள்ள இடங்கள் யாவை ?

14. மேனாட்டினர் போற்றும் வண்ணம் நம்மிடம் உள்ள சிற்பம் எது ? அதன் தன்மை யாது ?

15. சிற்பக் கலையால் நாம் அடையும் பயன்கள் யாவை ?

16. சிற்பக் கலைக்கு நாம் செய்யத்தக்க கடமை யாது ?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:- இன்னதென்று, மகிழாதவர், இயைய, வாய்ப்பு, அழகுபடுத்த, பேராதரவு, கண்குளிர, மனதார, வாயார, கைத்திறம்.

2. எதிர்ப் பதங்கள் கூறுக:- மகிழாதார், இயலாது, அழியா, அறியாதார், அடங்கா.

3. நீ கண்ட ஒரு கோவிலில் உள்ள சிற்பங்களைப் பற்றி ஒரு கட்டுரை வரைக.

4. பத்திரிகைகளில் வெளியாகும் சிற்பப் படங்களைச் சேகரித்து ஒட்டுக.

## இலக்கணம்

1. தெரிந்துகொள்க:- முதல் வேற்றுமைக்கு **எழுவாய் வேற்றுமை** என்றும், இரண்டாம் வேற்றுமைக்குச் **செயப்படுபொருள் வேற்றுமை** என்றும், ஏழாம் வேற்றுமைக்கு

இடப் பொருள் வேற்றுமை என்றும், எட்டாம் வேற்று மைக்கு விளி வேற்றுமை என்றும் வேறு பெயர்கள் உண்டு.

2. பின்காணும் வாக்கியங்களில், தடித்த எழுத்தில் உள்ள சொற்களில் ஏற்ற வேற்றுமை உருபுகளைச் சேர்த்து எழுதுக:-

(1) ஓவியப்புலவன் கருதியது கற்பனைக் கண்ணுடன் பார்க்கிருன்.

(2) கவிஞன் கவிகள் மூலம் உலகம் எடுத்துரைக் கிருன்.

(3) ஓவியம் குழவியே சிற்பம் ஆகும்.

(4) சாலிவாகனன் மண் செய்த உருவங்கள் கொண்டு போர் செய்தான்.

3. கற்பனைக் கண்ணுடன் பார்க்கிருன்.
கற்பனைக் கண்ணுடன் பார்த்தான்.
கற்பனைக் கண்ணுடன் பார்ப்பான்.

பார்க்கிருன்- நிகழும் செயலை உணத்துகிறது.
பார்த்தான்- நடந்து விட்ட செயலை உணர்த்துகிறது.
பார்ப்பான்- இனி நிகழ வேண்டிய செயலை உணர்த்து கிறது.

காலங்கள் மூன்று ஆகும்.

பார்க்கிருன்- நிகழ்கால வினைமுற்று.
பார்த்தான்- இறந்தகால வினைமுற்று.
பார்ப்பான்- எதிர்கால வினைமுற்று.

4. ஒவ்வொரு வகை வினைமுற்றுக்கும் ஐந்தைந்து உதாரணங்கள் வரைக.

---

# 11. பொய் வேடதாரி

நம் நாட்டில் கிழக்கிந்தியக் கம்பெனியார். ஆட்சி நடந்து வந்த 18, 19-ஆம் நூற்றுண்டு களில், பாண்டிய நாட்டில் குழப்பம் இருந்துவந்தது. அதனுல் அந்நாடு தனி நிலைமையை இழந்தது. அக் காலத்தில் சேது மன்னர்களில் இறுதியாக ஆண்டவர் இராமசாமி சேதுபதி என்பவர். அவர் அகால மரணம் அடையவே, அவர் தேவியார் பர்வதவர்த்தனி நாச்சியார் என்பவர் ஆட்சியை ஏற்று நடத்தினுர். அவர் தமக்கு உதவியாகத் தம் தங்கை யின் புதல்வரான பொன்னுசாமித் தேவரை அமைச்ச ராக்கி ஆட்சித் தலைமையை அவரிடத்து ஒப்படைத்தார்.

பொன்னுசாமித் தேவர் இளம் வயது முதற் கொண்டே கல்வியில் வல்லவராக விளங்கினுர். அமைச்சுப் பதவி ஏற்ற அவரது அவை, புலவர் பெருமக்களால் நிறைந்து இருந்தது. தமிழ்ப் புலமை இயல்பாகவே பெற்றவராதலால் அவருடைய அவைக்குப் புலவர்கள் பலர் வருவதுண்டு. தேவர் மீது இயற்றி வந்துள்ள பாக்களைப் புலவர்கள் சிலர் பாடிப் பரிசிலைப் பெற்றுச் செல்வர். தேவரது அவை யில் தமிழ் மொழிப் புலவர் மட்டுமின்றி வடமொழிப் புலவரும் இடம் பெற்றிருந்தனர். இவர்கள் யாவரும் பொன்னுசாமித் தேவரின் குறிப்பறிந்து ஒழுகும் தன்மையைப் பெற்றிருந்தனர்.

ஒரு சமயம் தேவரவையில் கம்பராமாயண ஆராய்ச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அவை முழுவதும் கற்றுவல்ல கலைஞர்கள் நிறைந்திருந்த னர். புலவர்கள் கம்பன் சொற்களை எடுத்துக்

கூறித் தத்தமக்குத் தோன்றும் வகையில் பாராட்டி இன்பம் பெற்றனர். தேவர் அவர்களும் அவ்வுரை யாடலைச் சுவைத்து மகிழ்ந்த வண்ணமிருந்தனர். அப்பொழுது இடையிடையே ஏதோ பரபரப்புச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

அப்போது வாயிற் காவலன் தேவரிடம் வந்து சாமியார் ஒருவர் தம் மாணுக்கர் கூட்டத்துடன் வந்திருப்பதாகவும், அவர் தேவரைக் காண விரும்பு வதாகவும் கூறினன். தேவர் அவரை அழைத்து வருமாறு கட்டளை இட்டார்.

அந்தச் சாமியார் சந்தக் கவிகளைப் பாடுவதில் வல்லவர் என்று அக்காலத்தில் கூறப்பட்டவர். தாம் முருகனின் அவதாரமென்றும், வேண்டு வோர்க்கு வேண்டியவற்றை வழங்கும் வல்லமை தமக்குண்டு என்றும் அவர் கூறி வந்தார்; நா வல் லமையாலும், ஆடம்பரங்களாலும் செல்வரை மயக்கிப் பொருள் திரட்டி வந்தார்; அவர் பொன்னுசாமித் தேவரிட்மும் தம் ஆற்றலைக் காட் டிப் பொருள் பெறவே வந்திருந்தார்.

சாமியார் தம் மாணவர் குழாத்துடன் ஆடம்பர மாக அவையினுள் நுழைந்தார்; அரசவையில் நுழையுங் காலத்து இருக்கத் தக்க அடக்கம் அவரி டம் இல்லை. "முருகா! முருகா!" என்று இரைந்து கொண்டே தேவர் இருக்கும் இடத்தை அடைந் தார்; தேவர் ஆசனத் தருகில் தாமே உட்கார்ந்து கொண்டார்; சிறிது நேரம் கண்களை மூடிக்கொண் டிருந்தவர் ஆவேசம் வந்தவர் போல் எழுந்தார். அறையில் குறுக்கும் நெடுக்கும் அலையலானுர்;

முணுமுணுத்துக் கொண்டிருந்த அவர் பெருங் குர லுடன் பேசலானுர். அவர் தேவரை நோக்கி, "அடா! நாம் யாரென்று நீ நினைத்தாய்? நாம் சூரனைக் கொன்ற வீரர் ஆவோம். பன்னிரு கை கொண்ட பழனி வேலன். நீ பாராட்டி வணங்கி வரும் தமிழ்க் கடவுள். நீ நம் பக்தன் என்ற கார ணத்தால் உனக்கு அருள்புரிய வலிய வந்துள் ளோம். இனியாவது இதனை அறிந்து ஏற்றபடி ஒழுகுக," என்று சீற்றத்துடன் கூறி அமர்ந்தார்.

தேவர் அமைதியுடன் அவரை நோக்கி, "அறிந் தேன் அறிந்தேன்; பொறுத்துக்கொள்ளுவீர்க ளாக" என்று கூறி அவையை ஒரு முறை பார்த் தார்; பின்னர் வாளாவிருந்தார். சாமியார் தம் தந் திரம் பலித்து விட்டதென்றெண்ணி, "இனி மேலா வது நம் அடியாரை அலட்சியம் செய்யமாட்டாய் என்று எண்ணுகிறேம்" என்று கூறி மேலும் ஏதேதோ கூறிய வண்ணம் இருந்தார்.

அப்போது அவையின் ஒரு புறத்திலிருந்து மெல்லிய இரைச்சல் கேட்டது. அது சிறிது சிறி தாகப் பெரிதாயிற்று. அவையினர் கவனம் முழு வதும் அவ்வோசை கேட்ட பக்கமாகத் திரும்பியது. சாமியாரும் அதனை உற்று நோக்கிய வண்ணம் இருந்தார். சிறிது நேரத்தில் ஒரு பெருங் குரல் கேட்டது. குரல் கேட்ட இடத்தில் கருத்துப் பருத்த உருவம் வெளியே வந்தது. 'எங்கே அவன்? எங்கே அவன்?' என்று கூறியவண்ணம் பல திசைகளில் பாய்ந்தது; ஆவேசம் மிகுந்த கைகளை நீட்டியும் முடக்கியும் அவையைப் பெரிதும் அச்சமுறச் செய்து விட்டது; பின்னர் நேராகத்

தேவர் அமர்ந்திருக்கு மிடத்திற்கு வந்தது. அண் மையில் வீற்றிருந்த சாமியாரிடம் சென்றது. "ஆ! ஆ! நீ இங்கேயா இருக்கிருய்?" என்று கூறி அவர் தோள் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டது; அவரை அசைய விடாமல் அழுத்திக் கொண்டது. "அடா! உன் பொய் வேடத்தை இங்கேயுமா காட் டத் துணிந்தாய்? நான் உனக்குப் பழனியில் இட்ட கட்டளை யாது? நம் பக்தன் பொன்னுசாமியிடம்



சென்று உன் கவிதைத் திறமையைக் காட்டிப் பொருள் பெற்றுச் செல்லத்தானே கூறினேம்! நீ இங்கு வந்து, நீயே நாம் எனவும், வேண்டியவற்றை வழங்கும் வல்லமை உனக்கு உண்டெனவும் கூறி நம் பக்தனை ஏமாற்ற அல்லவோ பார்த்தாய்! உன்னை இங்கேயே சூரனைக் கொன்ற சுடர் வேலால் கொல்ல வேண்டும். நீ என்னை உன் சந்தக் கவிக ளால் பாடியிருக்கின்றமையால் உன் பிழை பொறுத்

தோம். மன்னிப்புக் கோரி உடனே இவ்விடத்தை விட்டுச் செல்" என்று பலவாறு கூறிப் 'பளிச்' என்று ஓர் அறை அறைந்தது.

சாமியாருக்கு ஒன்றும் தோன்றவில்லை. அழுத்தப்பட்டதால், அவரடைந்த இன்னல் பெரிதாயிற்று. சபையில் உள்ளோர் ஆவேச மூர்த்தியை நோக்கி, "சுவாமி! அவரை மன்னித்தருள்க. மூடத்தனத்தால் தேவரை மயக்க எண்ணினர். இனி அவர் இங்ஙனம் செய்யார்" என்று சாமியாருக்குப் பரிந்து கூறினர். எனினும், ஆவேச மூர்த்தி சாமியாரை விட்டபாடில்லை. மேலும் மேலும் அழுத்தியது. "இனி இத்தகைய குற்றம் செய்யேன்" என்ற சொல் அவரிடமிருந்து வாராமையால் ஆவேச மூர்த்தி அவரை அல்லல் படுத்துவது நீங்கியபாடில்லை.

போலிச் சாமியார் என்ன செய்வதென்று தோன்றாமல் விழித்தார். தமக்குண்டான அவமானத்தை நீக்க வேறு வழியில்லை என்பதை உணர்ந்தார். எப்படியாவது அவையை விட்டுச் செல்ல வேண்டுமென்று எண்ணினர். "இனி இந்தக் குற்றம் செய்யேன், பிழை பொறுத்தருள்க" என்று வாய்விட்டுக் கதறினர். உடனே ஆவேச மூர்த்தி, "அடே இனி அறிவுடன் நட" என்று கூறிப் பிடியைத் தளர்த்தினர். சாமியார் நாணத்தால் தலைகுனிந்து மெல்ல எழுந்து வெளியே சென்றார்.

சாமியார் அவைக்கேற்றபடி ஒழுகவில்லை. தேவரையும் மதிக்கவில்லை. இச்செயல் தேவருக்குப் பொறுக்க முடியாத நிலையை உண்டுபண்ணியது. இதனல் தேவர் தம் அவைப் புலவர் ஒருவருக்கு

ஒரு குறிப்பைக் காட்டினுர். காட்டியவுடன் அவர் குறிப்பறிந்து நடந்து ஆவேச மூர்த்தியாக வந்து சாமியாரை வெருட்டினர்.

## அருஞ்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| குழப்பம் | ஆடம்பரம் | அமைதி | மன்னிப்பு |
| தனிநிலே | சுவைத்து | இரைந்து | நீட்டி |
| இன்னல் | இறுதியாக | ஆவேசம் | முடக்கி |
| தளர்த்தி | அகாலம் | அண்மை | நாணம் |
| அமைச்சு | அவதாரம் | ஏற்றபடி | அழுத்தி |

## கேள்விகள்

1. பொன்னுசாமித் தேவர் யார்? அவர் அமைச்சரானது எங்ஙனம்?
2. பொன்னுசாமித் தேவரின் குணங்களைக் கூறுக.
3. பொன்னுசாமித் தேவரின் அவை சாமியார் வந்தபோது எவ்வாறு இருந்தது?
4. சாமியார் இயல்புகளைக் கூறுக.
5. சாமியார் தேவரவையில் நுழைந்த தெப்படி?
6. சாமியார் அவையில் செய்த தகாச் செயல்கள் யாவை?
7. தேவர், சாமியார் செயல்களைக் கண்டபின் செய்தது யாது?
8. சாமியாரின் போலித்தன்மை வெளிப்பட்டது எப்படி?
9. முருக வேடதாரி சாமியாரை எங்ஙனம் துன்புறுத்தினுர்?
10. சாமியார் எங்ஙனம் வெருட்டப்பட்டார்?

## பயிற்சி

1. இக்கதையை 25 வரிகளில் சுருக்கி வரைக.
2. இக்கதை நிகழ்ச்சியைச் சாமியார் சொல்வது போல வரைக.
3. இத் தொடர்களை வாக்கியங்களில் அமைத்து வரைக :—

   குறிப்பறிந்து, கற்றுவல்ல, இடையிடையே, பர பரப்பு, குறுக்கும் நெடுக்கும், முணுமுணுத்து, கூறிய வண்ணம், ஏதேதோ, சிறிது சிறிதாக, மேலும் மேலும்.
4. இக்கதையை உன் குடிமைப் பயிற்சி வகுப்பில் நாடகமாக நடித்துக் காட்டுக.

## இலக்கணம்

தெரிந்து கொள்க :

நீ இதனைச் செய்.
நீ இதனைச் **செய்க.**

செய், செய்க என்ற இரு சொற்களையும் கவனி. செய் என்பது கட்டளைப் பொருளில் வந்துள்ளது. இது **ஏவல் வினைமுற்று** எனப்படும். **செய்க** என்பது சற்று மரியாதையாகக் கட்டளையிடும் பொருளில் வந்துள்ளது. இது **வியங்கோள் வினை முற்று** எனப்படும்.

ஒரு சில ஏவல் வினைகளையும், வியங்கோள் வினைகளை யும் கவனிக்கவும்.

| **ஏவல் வினை** | **வியங்கோள் வினை** |
|---|---|
| நீ உண். | நீ உண்க. |
| நீ செல். | நீ செல்க. |
| நீ பாடு. | நீ பாடுக. |

இப்பாடத்திலிருந்து ஐந்து வியங்கோள் வினை முற்றுக்களை எடுத்தெழுதுக.

## 12. அந்தகக் கவி

நம் தமிழ் நாடு பல மண்டலங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அவைகளுள் ஒன்று தொண்டை மண்டலம் என்பது. காஞ்சீபுரமும் அதனை அடுத் துள்ள இடங்களும் தொண்டை மண்டலமாகும்.

தொண்டை மண்டலத்தில் பூதூர் என்பது ஓரூர். அவ்வூரில் வடுகநாத முதலியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு மகன் ஒருவன் பிறந் தான். அவன் பிறந்தபோதே குருடனாக இருந்தான். மகனைக் கண்ட பெற்றோர் மனம் வ்ருந்தினர். எனி னும், 'காக்கைக்குந் தன் குஞ்சு பொன் குஞ்சல் லவா?' அவனுக்கு வீரராகவன் என்று பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர்.

வீரராகவன் பள்ளி செல்லும் வயது வந்தவுடன் தந்தையார் மிகவும் மனம் வருந்தினார்; மகனை எப் படிப் பள்ளிக்கு அனுப்புவதென்று மனம் கலங்கி னார். வீரராகவன் தன்னைப் பள்ளிக்கு அனுப்பினால், தான் ஒரு சிறந்த கல்விமான் ஆவதாகக் கூறினான். அப்படியே அவன் பள்ளிக்குச் சென்று கற்க லானான்.

ஆசிரியர், வீரராகவன் முதுகில் எழுத்துக்களை எழுதிக்கொண்டு வந்தார். அவர் எழுத எழுத வீர ராகவன் அவற்றை மனத்தில் பதித்துப் பயின்று கொண்டான்; நூல்களைப் பிறர் படிக்கப் படிக்க அவற்றைக் கேட்டுத் தனது நெஞ்சிலே பதித்துக் கொண்டான்; பின் அக்காலத்தில் காஞ்சீபுரத்தில் இருந்த ஒரு சிறந்த புலவரிடம் பாடங் கேட்டு மிகச்

சிறந்த புலவனுகத் திகழலாயினன் ; கம்பர் பாடிய இராமாயணப் பாடல்கள் யாவற்றையும் வாய்ப் பாடமாகச் சொல்லிச் சொற்பொழிவு செய்யும் வல்ல மையைப் பெற்ருன்.

வீரராகவனை அனைவரும் பாராட்டலாயினர். சேர, சோழ, பாண்டிய மண்டலங்களில் உள்ள புலவர்கள் முதல் யாவரும் வீரராகவனைப் புகழ்ந்து பல பரிசுகளை நல்கினர். இங்ஙனம் புகழ் பரவவே வீரராகவனைக் கவி வீரராகவ முதலியார் என்று யாவரும் அழைக்கலாயினர். இவர் அந்தகராதலின், இவரை அந்தகக் கவி வீரராகவ முதலியார் என்று கூறி வந்தனர்.

வீரராகவ முதலியார் பண்டைக் காலப் புலவர் களைப் போலவே பரிசில் வாழ்க்கையை நடத்தி வந்தார். இவர் பலரிடம் சென்று தம் பாவன்மை யைக் காட்டிப் பரிசு பெறுவார். உவர்க்கடல் போன்ற செல்வருக்கு இவரது நாவன்மையை அறியும் ஆற்றல் இராது. இதனுல் இவர் நயமறியா மக்களைப் பாடி நலிந்திருந்தார். இத்தகு வாழ்க்கையை நடத்தி வந்த நாவலர் ஒரு நாள் பரிசு பெறும் நோக்கத் தோடு வெளியே சென்றிருந்தார்; பற்பல இடங் களுக்கும் சென்ருர். எவரும் இவரது பாடலை ஏற்றுப் பரிசு கொடுக்கவில்லை. உடல் களைத்தது. உள்ளம் சோர்ந்தது. மாணவன் வழிகாட்ட இவர் கடும் வெய்யிலில் இல்லம் நோக்கிச் செல்ல லாயினர்.

அவ்வமயம் இவர் மனைவியார் அண்டை வீட் டில் பிற பெண்டிரொடு உரையாடிக் கொண்டிருந் தார். கவிஞர் வருவதைக் கண்ட பெண்கள்

புலவரின் மனைவியாரை நோக்கி, "நும் கணவர் வந்து விட்டார்" என்றனர். அது கேட்ட அம்மையார், "வந்தால் என்ன ? யானை மீதா வருகிறார்?" என்று இகழ்ச்சி தோன்றக் கூறினார். இதனைக் கேட்ட வண்ணம் வந்த புலவரின் மனம் புண்ணாயிற்று. வெறுங்கையுடன் வீடு திரும்பிய புலவருக்கு வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற்போலிருந்தது.

அவர், மாணவனுடன் வந்த வழியே மீண்டார்; வறுமையை ஒழித்து வளமார்ந்த பொருளுடனேயே வீடு திரும்புவது என்ற வஞ்சினம் பூண்டார்; தம் மாணாக்கனுடன் பல இடங்களுக்குச் செல்வாராயி னர்; செல்வர்கள் பலரைக் கண்டனர்; பாடல்கள் பல பாடிப் பரிசு வேண்டினர்; எண்ணியவாறு அவர் பரிசு பெற இயலவில்லை.

ஈழ நாட்டில் பரராசசிங்கன் என்ற ஒரு மன்னன் இருந்தான். அவன் சிறந்த கல்விமான்; கற்றவரை ஆதரித்து வந்தான். அவன் சபையில் தமிழ்ப் புல வர்கள் பலர் இருந்தனர். அவன் தமிழ்ப் புலவர் களுடன் தமிழை ஆராய்ந்தவன்; அதனால் தமிழ் மொழியின் பெருமையை அறிந்து தமிழ்ப் புலவர் களைப் பெரிதும் ஆதரித்து வந்தான்.

பரராசசிங்கனது புகழை அறிந்தார் கவி வீரராக வர். அப்புவியரசனது அவைக் களத்தை அடைந்து பரிசு பெற விரும்பியது அவருள்ளம். தம் மாணவ னுடன் அவர் கலச் செலவை மேற்கொண்டார்; இலங்கைப் பதியை அடைந்தார். உடனே கவிஞர் தம்மைப்பற்றியும் தம் புலமைத் திறத்தைப்பற்றியும் அறிவிக்க ஒரு சீட்டுக் கவியைப் பாடினார்; அதனை அரசனுக்கு அனுப்பினார்.

பரராசசிங்கன் புலவரது தமிழ்ப் புலமையை உணர்ந்தான் ; அவரை அழைப்பித்து அவரோடு அளவளாவ வேண்டும் என்று எண்ணினுன் ; தன் அவைக்களப் புலவர்களிடம் அதற்கானவற்றை உடனே செய்யுமாறு கட்டளையிட்டான். பரராச சிங்கனது அவைப் புலவர்கள் கவிஞரது திறமையை உணர்ந்தவர்கள் ; அவர் அவைக்கு வரின் தங்களது சிறப்புக் குன்றிவிடும் என்று எண்ணினர் ; அரசனை அவர் பாராது இருந்துவிட ஒரு சூழ்ச்சியை மேற் கொள்வாராயினர்.

அவைப் புலவர்கள் அரசனிடம் சென்று, " அரசே ! புவியை யாளும் புரவலர்கள் உறுப்புக் குறை உள்ளவர்களைக் காணலாகாது. இம்மரபினை மீறி அந்தகராக இருக்கும் அப்புலவரைத் தாங்கள் காணல் தகுமா ? அவர் நம் நாட்டிற்கு வந்தமைக் காக ஏதேனும் பொருள் கொடுத்து அனுப்பி விட லாமே !" என்று நயமாக எடுத்துக் கூறினர். பரராச சிங்கனுக்குப் புலவர்கள் கூறிய முறையில் கவி வீர ராகவரை நடத்த விருப்பமில்லை. தமிழ்மொழி ஆர்வம் மிக்க அவன் தமிழ்ப் புலவரது புலமை யைக் காண்பதே பெரும் பேறு என்று எண்ணி ஞன். உடனே புலவர்களை நோக்கிப் " புலவர்காள் ! நான் அவரைக் காண விரும்பவில்லை. அவரது தமிழ்மொழித் திறமையையே அறிய விரும்புகிறேன். அவர் அந்தகர் என்று நீங்கள் கூறுகிறீர்கள். எங் கள் இருவருக்குமிடையே திரை ஒன்று இட்டால் அதனை அவர் அறியார். அவரது புலமையை மட் டும் காதால் கேட்டு மகிழ்வோம்" என்றனன். புலவர் களுக்கு வேறு வழி இல்லாது போயிற்று. கவி வீர

ராகவர் அவைக்கு வரவேண்டிய நாளும் குறிப்பிட்டாகி விட்டது.

பரராசசிங்கனின் அவை குறித்த நாளில் கூடியது. அவையில் புலவர்களும் பிற மன்னர்கள் பலரும் வீற்றிருந்தனர். கொலு மண்டபத்தின் இடையில் ஒரு திரைவிடப்பட்டிருந்தது. ஒரு பக்கம் மன்னனது அரியணையும், மற்றொரு பக்கம் அந்தகக் கவிஞர் அமரவேண்டிய ஆசனமும் இருந்தன. கவிஞர்



அரசர் அவையில் அந்தகக்கவி.

தம் மாணவனைக் கண்ணாகக் கொண்டு அவைக் களத்தை அடைந்தார்; தம் ஆசனத்து அமர்ந்தார். அவையின் நிலையைக் கண்டான் அவருடைய மாணாக்கன். அவன் மதி நுட்பம் மிக்க மாணவனாதால் மனம் நொந்தான்; தன் ஆசிரியருக்கு அங்குள்ள உண்மை நிலையைப் புலப்படுத்த விரும்பினான்; பலர் வீற்றிருக்குமிடத்தில் வெளிப்படையாக ஏதும் கூற அவன் விரும்பவில்லை. இருந்

தாற்போலிருந்து, "சிவ சிதம்பரம்! சிவ சிதம் பரம் !" என்று கூறி வாளாவிருந்தான்.

மன்னனும் மற்றையோரும் மாணுக்கன் இங்ஙனம் கூறல் மரபு போலும் என்று இருந்தனர். கவிஞர் தம் மாணுக்கன் செயலைச் சீர்தூக்கலாயினர். "என்றும் இங்ஙனம் கூறும் பழக்கமில்லாத தம் மாணவன் இன்று இவ்விதம் கூறுவானேன்?" என்று எண்ணினர். கற்பனையுள்ளம் படைத்த கவிஞர் உள்ளத்தில் உண்மை உதயமாயிற்று. குருடரைக் காணக்கூடாதென்ற நிலைக்கேற்ப அங்குத் திரையிடப்பட்டுள்ளதை உளக் கண்ணுல் உணர்ந்தார். உடனே ஒரு பாடல் பாடினர். அந்தப் பாடலில், "நெடுங்கடல் கடந்து வந்த என்னைக் காண விரும்பாது திரையால் மறைத்துக் கொண்டு இருக்கத் தகுமா ?" என்ற பொருள் அமைந்திருந்தது. அரசனும், மற்றப் புலவர்களும் அந்தக் கவியின் திறமையைக் கண்டு அஞ்சினர். அரசன் திரையை அகற்றச் செய்தான் ; தன் பிழையைப் பொறுத்தருள வேண்டினன்.

பஞ்ச இலிங்கங்களில் சிதம்பரத்தில் எழுந்தருளி இருப்பது ஆகாச லிங்கம். அங்குப் பூசைகள் திரையினுள் நடைபெறும். மாணவன் திரை உள்ளது என்று சுட்டிக்காட்டவே "சிவ சிதம்பரம்" என்று கூறினன். சிதம்பரத் திரையைப் பற்றி அறிந்துள்ள புலவர், மாணுக்கன் "சிவ சிதம்பரம்" என்றவுடன் தமக்கும் மன்னனுக்கும் இடையே திரை இருக்கிறது என்பதை ஊகித்தறிந்து கொண்டார்.

மன்னன் பிழையைப் பொறுத்தார் புலவர். சான்ருேர் சினம், 'நீர் மேல் எய்த வடுவேயல்லவா?" அரசன் வேண்டுகோளின்படி பல இனிய சுவை நிரம்பிய பாடல்களை அவர் பாடினர். அரசனும் அவையினரும் அப்பாடல்களைப் பாராட்டிப் புகழ்ந் தனர். புலவர் விரும்பியபடியே யானைக் கன்று, வளநாடு ஆகியவற்றைப் பரிசிலாகப் பரராச சிங்கன் அளித்தான். அவற்றைப் பெற்றுக் கொண்டு புலவர் தம் நாடு திரும்பினர்; தம் ஊருக்கு யானைக் கன்றின்மேல் ஏறிச்செல்வாராயினர்.

தாம் செய்த பிழையால், நாட்டைவிட்டுச் சென்ற நாதன் நாடு திரும்புங் காலம் எதுவோ என்று ஏங்கி இருந்தார் அவர் மனைவி. தம் கண வன் வீடு நோக்கி வருவதைக் கண்ட அவர் ஓடோ டியும் சென்று புலவர் காலில் வீழ்ந்து மன்னிப்பு வேண்டினர். புலவர் அவருக்கு வேண்டிய தேறு தல் கூறினர்.

அந்தக் கவி வீரராகவர் அந்தகராயினும் அகக் கண் அமையப் பெற்றவர். அவர் பல நூல்களையும் பாடல்களையும் பாடியுள்ளார். இப்புலவரது வர லாறு நம்மில் ஒவ்வொருவருக்கும் உறுதுணையாய் அமையவேண்டும்.

### அருஞ்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| மண்டலம் | பதித்து | நாதன் | நயமாக | மரபு |
| மேனி | பிரசங்கம் | வஞ்சினம் | குறித்த | வடு |
| வண்ணம் | அந்தகர் | அரியணை | ஏங்கி | பயின்று |
| பாவன்மை | மதி | நுட்பம் | தேறுதல் | சுவை |
| இகழ்ச்சி | வளம் | அளவளாவ | வாளா | உறுதுணை |

## கேள்விகள்

1. தொண்டை மண்டலம் என்பது யாது ?
2. அந்தகக் கவிஞர் என்பவர் யார் ? அவர் வரலாற்றைக் கூறுக.
3. தந்தையார் ஏன் வருந்தினர் ? தனயன் கூறிய பதில் யாது ?
4. வீரராகவர் கல்வி கற்றுக்கொண்ட தெப்படி ?
5. வீரராகவர் கவி வீரராகவர் ஆனதெங்ஙனம் ?
6. உடல் களைத்து உள்ளஞ் சோர்ந்து கவிஞர் வீடு சென்றதேன் ?
7. கவிஞரின் மனைவியார் பிற பெண்களிடம் கூறியது யாது ?
8. கவிஞர் இலங்கை சென்றதன் நோக்கம் யாது ?
9. இலங்கைக் கவிஞர்கள் செய்த சூழ்ச்சி யாது ?
10. சூழ்ச்சியின் காரணம் என்ன ?
11. பரராசசிங்கன் கவிஞரை அவைக்கு எங்ஙனம் அழைப்பித்தான் ?
12. அவையில் நடந்ததென்ன ?
13. அந்தகக் கவிஞர் திரையிட்டிருப்பதை எப்படி அறிந்தார் ?
14. புலவர் பெற்ற பரிசுகள் யாவை ? மனைவியார் அவரை வரவேற்றதெங்ஙனம் ?

## பயிற்சி

1. அந்தகக் கவியின் வரலாற்றைச் சீடன் கூறுவது போல் வரைக.
2. அந்தகக் கவிஞர் வரலாற்றில் சுவையுள்ள நிகழ்ச்சிகள் பல உண்டு. அவற்றை அறிந்து கொள்க.

## இலக்கணம்

1. தெரித்து கொள்க :

(அ) மகன் + வந்தான் = மகன் வந்தான். இரண்டு சொற்கள் ஒன்று சேர்வது புணர்ச்சி. ஒரு சொல் லோடு மற்றொரு சொல் சேரும்போது மேலே கண்டவாறு இயல்பாக இருந்தால் அது இயல்பு புணர்ச்சி என்று கூறப்படும்.

(ஆ) மா + காய் = மாங்காய். இங்ஙனம் இரு சொற்கள் சேருங்காலத்து இரண்டும் சேர்ந்த சொல்லில் வேறு பாடு உள்ளது. இது விகாரப் புணர்ச்சியாகும்.

மேலே காட்டப்பட்ட இரு சொற்கள் **மகன், மா** என்பன **நிலைமொழிகள்**. அவை நிலையாக இருப்பன. கூட்டல் குறிக்கு அடுத்துள்ள **வந்தான், காய்** என் பன **வருமொழிகள்**. இவை நிலைமொழியோடு வந்து சேரும் மொழிகளாதலின் வருமொழிகளாயின.

2. பணம் + இல்லை = பணமில்லை.
அவர் + உயரம் = அவருயரம்.

இவை புணர்ந்துள்ள விதத்தைக் கவனிக்கவும். நிலை மொழி ஈற்றில் உள்ளது மெய்யெழுத்து. வருமொழி முதலில் உள்ளது உயிரெழுத்து. இரண்டும் சேரும் போது மெய்யும் உயிரும் ஒன்று சேர்ந்து உயிர்மெய் எழுத்தாயிற்று. எனவே, **மெய்முன் உயிர்வரின் இரண்டும் சேர்ந்து உயிர் மெய் எழுத்தாகும்** என்பதை அறிந்து கொள்க.

3. சொல் + அழகு = சொல்லழகு
கல் + அடி = கல்லடி

இவை புணர்ந்துள்ள விதத்தைக் கவனிக்கவும். தனிக்குறிலை அடுத்த மெய் முன் உயிர் வந்துள்ளது. இடையில் ல் என்ற எழுத்து மிக்குள்ளது. எனவே **தனிக் குறிலை அடுத்துவரும் மெய் உயிர் வரின் இரட்டும்** என்பதை அறிக.

# செய்யுட் பகுதி

## 1. கடவுள் வாழ்த்து

1. பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போக முந்திரு வும்புணர்ப்பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப்பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப்பானை
இன்ன தன்மையன் என்றறி யொண்ணு
எம்மானைஎளி வந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரு ரானை மறக்கலு மாமே.

—சுந்தரர்

2. இன்பப் பெருக்கே ! அருட் கடலே !
இறையே ! அழியா இரும்பொருளே !
அன்பர்க் கருளும் பெருங்கருணை
அரசே ! உணர்வால் ஆம்பயனே !
வன்பர்க் கரிதாம் பரஞ்சோதி
வடிவே ! வடிவேல் மணியே ! என்
துன்பத் திடரைப் பொடியாக்கிச்
சுகந்தந் தருளத் துணியாயே !

—இராமலிங்க அடிகள்

3. ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய வுணர்விக்கும் என்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாள் என்உள்ளத்தினுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

—கம்பர்

4. வானூர்ந்த பொதியின்மிசை வளர்கின்ற மதியே!
மன்னியமூ வேந்தர்கள் தம் மடிவளர்ந்த மகளே!
தேனூர்ந்த தீஞ்சுனைசால் திருமாலின் குன்றம்
தென்குமரி ஆயிடைநற் செங்கோல் கொள்
செல்வி!
கானூர்ந்த தேனே! கற்கண்டே! நற்கனியே!
கண்ணே! கண்மணியே! அக்கட்புலஞ்
சேர்தேவி!
ஆனாத நூற்கடலை அளித்தருளும் அமிழ்தே!
அம்மே! நின் சீர்முழுதும் அறைதல் யார்க்
கெளிதே!

**—இரா. வேங்கடாசலம் பிள்ளை**

## குறிப்புரை

**1. சுந்தர மூர்த்தி சுவாமிகள் :** இவர் சைவ சமயக் குரவர் நால்வருள் ஒருவர். திருநாவலூரில் பிறந்தவர். தந்தை பெயர் சடையனார். தாயார் பெயர் இசை ஞானி. ஆலாலசுந்தரர், நம்பியாரூரர், வன்றொண்டர், தம்பிரான் தோழன் என்பவை இவருக்கு வழங்கும் வேறு பெயர்கள்.

அருஞ்சொற்பொருள் :- மெய்ப்பொருள் - உண்மைப் பொருள். போகம் - உலக இன்பம். திரு - செல்வம். புணர்ப்பான் - சேர்ப்பான். பணிப்பான் - கட்டளையிடு வான். எளிவந்த - எளிமையாய்க் கிடைத்த. பழனம் - வயல். ஆரூர் - திருவாரூர்.

**2. இராமலிங்க அடிகளார்:** தந்தை - இராமைய பிள்ளை. தாய் - சின்னம்மை. ஊர் - சிதம்பரத்திற்கு

அண்மையிலுள்ள மருதூர். காலம் - 1823—1873. குலம் கருணீகர்.

அருஞ்சொற்பொருள் :- இறை - கடவுள். இரும் - பெரிய. வன்பர் - தீயவர். பரம் - மேலான. சோதி - ஒளி. வடி - கூர்மை. வடிவேல்மணி - முருகக் கடவுள். இடர் - துன்பம்.

3. கம்பர் : தந்தை - ஆதித்தன். ஊர் - சோழ நாட்டிலுள்ள திருவழுந்தூர். காலம்—கி. பி. 12-ஆம் நூற்றுண்டு. குலம்-உவச்சர் குலம். மதம்- வைணவம். ஆதரித்தவர்- திருவெண்ணெய் நல்லூரிலிருந்த சடையப்ப வள்ளல். இப்பாடல் கம்பர் எழுதிய **சரசுவதி அந்தாதி**யில் உள்ளது.

அருஞ்சொற்பொருள்:-தூயஉரு- தூய்மையான வடிவம். என்னம்மை - என் தாயாகிய கலைமகள். பளிங்கு -உள்ளதை உள்ளவாறே காட்டும் தூய கல், கண்ணுடி. உணர்விக்கும் - அறிவிக்கும்.

4. ஆசிரியர் இரா. வேங்கடாசலம் பிள்ளை : இவர் கரந்தைத் தமிழ்க் கல்லூரியின் பேராசிரியர்; கவியரசு என்று சிறப்பிக்கப்பட்டவர்; கவிதைகள் பல இயற்றிப் புகழ் பெற்றவர்; புலவர் வேங்கடசாமி நாட்டார் அவர்களின் நண்பர். அண்மையில் இவர் காலஞ்சென்றுர்.

அருஞ்சொற்பொருள்:- வானுர்ந்த-விண்ணை அளாவிய. பொதியில் - பொதிய மலையில். தீஞ்சுனை - இனிய சுனை, கான்-மணம். கட்புலம்-கண்ணினுல் பெறும் அறிவு. ஆனுத -குறையாத. அறைதல்- கூறுதல். திருமாலின் குன்றம் -வடவேங்கட மலை. மதி-திங்கள்; அறிவு. தென்குமரி-தெற்கே உள்ள கன்னியாகுமரி முனை.

## கேள்விகள்

(1) சுந்தரர், ஆரூர் இறைவனது இயல்பினை எவ்வாறு கூறியுள்ளார் ?

(2) இராமலிங்க அடிகள் இறைவனை எவ்வாறு உருவகம் செய்துள்ளார்?

(3) கம்பர் தம் உள்ளத்திற்குத் துன்பம் வாராது என்று கூறக் காரணம் யாது ?

(4) கலைமகளைக் கம்பர் எவ்வாறு வருணித்துள்ளார்?

(5) தமிழ் மொழியை ஆசிரியர் எவ்வாறு சிறப்பித்துக் கூறுகின்றார் ?

(6) தமிழ் மொழிக்கு இவர் வகுத்துள்ள எல்லைகள் யாவை ?

---

# 11. வருணனை

## 1. மலர்கள்

(1) வண்டின் வரவெதிர் பார்த்துநிற்போம்— நல்ல
வாசனை வீதியில் வீசிநிற்போம்;
உண்டு களிக்க மதுவளிப்போம்—சற்றே
உட்காரப் பீடமும் இட்டுவைப்போம்;
மங்கைய ரோடு குமரரையும்—மனம்
வாய்த்த மணஞ்செய்து வாழவைப்போம்;
தங்கமும் பொன்னும் மணிகளுமே— எம்மைத்
தாழ்ந்து வணங்கமேல் தங்கிடுவோம்.
ஈசன் அடியில் பணிந்திருப்போம்—அவர்
ஏந்து முடிமீதும் ஏறிநிற்போம்;
பூசனை செய்யும் அடியவரின்—உள்ளம்
பொங்கு களிப்பெலாம் காட்டி நிற்போம்.

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

## 2. ஆலமரம்

(1) ஆயிரம் கிளைகள் கொண்ட
அடி மரம் பெரிய யானை.
போயின மிலார்கள் வானில்.
பொலிந்தன பவளக் காய்கள்.
காயினை நிழலாற் காக்கும்
இலையெலாம் உள்ளங் கைகள்.
ஆயவூர் அடங்கும் நீழல்
ஆலிடைக் காண லாகும் !

(2) தூலம்போல் வளர்கிளைக்கு
விழுதுகள் தூண்கள் தூண்கள்.
ஆலினைச் சுற்றி நிற்கும்
அருந்திறல் மறவர். வேரோ
வாலினைத் தரையில் வீழ்த்தி
மண்டிய பாம்பின் கூட்டம்.
நீல்வான் மறைக்கும் ஆல்தான்
ஒற்றைக்கால் நெடிய பந்தல்.

—பாரதிதாசன்

## 3. நாட்டுவளம்

மாது ளங்கனி யைக்கரத் தில்கொடு
மந்திக் கூட்டங்கள் பந்தடித்தாடும்
பேதை வண்டுகள் பண்ணிசை கூறிடப்
பேடை மாமயில் நாடகமாடும்
கோதி லாத புளினங்கள் தோறும்
குலவி யன்னங்கள் இன்றுயில் கூரும்
சீத மாமதி தங்கிய சோலை
செறிந்த பாண்டிநன் னுடெங்கள் நாடே.

—அழகர் குறவஞ்சி

### குறிப்புரை

1. **கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை:** இவர் நாஞ்சில் நாட்டுத் தேரூரில் பிறந்தவர். பெற்றோர்-சிவதாணுப் பிள்ளை, ஆதிலட்சுமி. குலம்-வேளாளர். பிறப்பு-1876. இறப்பு-1954. இயற்றிய நூல்கள்-மலரும் மாலையும், ஆசிய சோதி, மருமக்கள் வழி மான்மியம் முதலியன.

அருஞ்சொற்பொருள் :—மது-தேன். பீடம்-இருக்கை. ஏந்து - தாங்கும். களிப்பு-மகிழ்வு. பூசனை-பூசை.

2. பாரதி தாசன் : இவர் புதுச்சேரியில் வாழ்பவர். தந்தை-கனகசபை. பிறப்பு-29-4-1881. இயற்பெயர்-சுப்புரத்தினம். பாரதியாரிடம் கொண்ட அன்பு காரணமாகப் பாரதி தாசன் எனப் புனைபெயர் கொண்டவர், இயற்றிய நூற்கள் — பாண்டியன் பரிசு, அழகின் சிரிப்பு, குடும்ப விளக்கு, தமிழச்சியின் கத்தி முதலியன.

அருஞ்சொற்பொருள் : — பொலிந்தன - விளங்கின. தூலம் - வீட்டு உத்திரம், திறல் - வலிமை. மண்டிய-மிகுந்த. வான்-ஆகாயம்.

3. நாட்டு வளம் : பாண்டிய நாட்டின் இயற்கைவளம் இச்செய்யுளில் கூறப்பட்டுள்ளது. அழகர் குறவஞ்சி என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது இச்செய்யுள்.

அருஞ்சொற்பொருள் :- கரம்-கை. பேதை வண்டு-அறிவில்லாத வண்டு. மந்தி-பெண் குரங்கு. பண்ணிசை-இராகத்துடன் கூடிய பாடல். பேடை மாமயில்-பெண் மயில். கோது-குற்றம். புளினம்-மணல் மேடு. துயில் கூரும்-தூங்கும். சீதம்-குளிர்ச்சி. செறிந்த-நெருங்கிய.

## கேள்விகள்

(1) மலர்கள் பெறும் .பெருஞ் சிறப்பினைக் கவிமணி எவ்வாறு நயம்படக் கூறியுள்ளார் ?

(2) ஆலமரத்தின் இயற்கைத் தோற்றத்தைக் கவிஞர் பாரதிதாசன் எவ்வாறு வருணனை செய்துள்ளார் ?

(3) பாண்டிய நாட்டின் வளத்தினை அழகர் குறவஞ்சி ஆசிரியர் எவ்வாறு கூறியுள்ளார் ?

———

# III. அறவுரை

## 1. சதகங்கள்

### (அ) தண்டலையார் சதகம்

(செய்ந்நன்றி அறிதல்)

துப்பிட்ட ஆலம்விதை சிறிதெனினும்
பெரிதாகுந் தோற்றம் போலச்
செப்பிட்ட திணையளவு செய்தநன்றி
பனையளவாய்ச் சிறந்து தோன்றும்
கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார்
வளநாட்டிற் கொஞ்ச மேனும்
உப்பிட்ட பேர்கடமை யுளவரையும்
நினைக்குமிந்த உலகந் தானே.

—சாந்தலிங்கக் கவிராயர்

### (ஆ) அறப்பளீசுர சதகம்

(வாழ்க்கைக்கு உரியன)

வாலிபம் தனில்வித்தை கற்கவேண்டும்கற்ற
வழியிலே நிற்கவேண்டும்
வளைகடல் திரிந்துபொருள் தேடவேண்டும்தேடி
வளரறம் செய்யவேண்டும்
சீலமுடை யோர்களைச் சேரவேண்டும் பிரிதல்
செய்யா திருக்கவேண்டும்
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண்டும்கொண்டு
தியாகம் கொடுக்கவேண்டும்

ஞாலமிசை பலதருமம் நாட்டவேண்டும்நாட்டி
    நன்ருய் நடத்தவேண்டும்
நம்பனிணே யடிபூசை பண்ணவேண்டும்பண்ணி
    ஞலுமிகு பக்திவேண்டும்
ஆலமமர் கண்டனே பூதியணி முண்டனே
    அண்ணலேஎன தருமைமதவேள்
அனுதினமும் மனதில்நினே தருசதுர கிரிவளர்
    அறப்பளீ சுரதேவனே.

—அம்பலவாணக் கவிராயர்

## (இ) குமரேச சதகம்

### (சாகாத மனிதர்)

அனேவர்க்கும் உபகாரம் வாவி கூவம்உண்
    டாக்கிஞேர், நீதிமன்னர்,
அழியாத தேவால யங்கட்டி வைத்துள்ளோர்,
    அகரங்கள் செய்தபெரியோர்,
தனேஒப்பிலாப்புதல்வனேப்பெற்ற பேர், பொருது
    சமர்வென்ற சுத்தவீரர்,
தரணிதனில் நிலேநிற்க எந்நாளும் மாருத
    தருமங்கள் செய்தபேர்கள்,
கனவித்தை கொண்டவர்கள், ஓயாத கொடையாளர்,
    காவியம் செய்தகவிஞர்,
கற்பினில் மிகுந்தவொரு பத்தினி மடந்தையைக்
    கடிமணம் செய்தோர்களும்
மனிதர்கள் சரீரங்கள் போகினும் சாகாத
    மனிதரிவர் ஆவரன்ருே !
மயில்ஏறி விளேயாடு குகனே ! புல்வயல்நீடு
    மலேமேவு குமரேசனே !

—குருபாத தாசர்

## குறிப்புரை

(அ) **சாந்தலிங்கக் கவிராயர் :** தண்டலை என்னும் ஊரிலுள்ள சிவபெருமான்மீது இவர் பாடிய நூறு பாடல்களையுடையது தண்டலையார் சதகம். திருத்தண்டலை நீள்நெறி என்பது சிவபெருமான் கோயில் கொண்டுள்ள திருத்தலங்களுள் ஒன்று.

அருஞ்சொற்பொருள் :- துப்பிட்ட - (பறவைகள் தின்று) உமிழ்ந்திட்ட. செப்பு இட்ட-சிமிழில் வைத்த. கொப்பு-காதணி. பேர் கடமை-பேர்கள் + தமை. உள வரை-(உயிர்) உள்ளவரை.

(ஆ) அம்பலவாணக் கவிராயர் : இவர் அறப்பளி என்னும் ஊரிலுள்ள சதுரகிரி ஈசுவரர் மீது பாடிய சதகம் இந்நூல். அறப்பளி என்னும் ஊர் சேலம் மாவட்டத்தில் நாமக்கல்லின் அருகில் உள்ளது.

அருஞ்சொற்பொருள் :- வளை கடல்-உலகைச் சுற்றியுள்ள கடல். நம்பன்-கடவுள். வளர் அறம்-பெருகுகின்ற தருமம். ஆலம் அமர்கண்டன்-நஞ்சு பொருந்திய கழுத்தையுடைய சிவன், பூதி-திருநீறு. சீலம்-ஒழுக்கம். தியாகம்-கொடை. முண்டன் - நெற்றியுடையவன். நினைதரு-நினைக்கும்.

(இ) குருபாத தாசர் : இவர் குமரக் கடவுளைப் பாடும் முகத்தால் நீதிகளை எடுத்துரைக்கின்றார். புல்வயல் என்பது ஒரு சிற்றூர்.

அருஞ்சொற்பொருள் :- வாவி-குளம். கூவம்-கிணறு. அகரம்-நகரம். சமர்-போர். தரணி-பூமி. கனவித்தை-சிறந்த கல்வி. கடி மணம்-திருமணம். குகன், குமரேசன் என்பன முருகக் கடவுளின் திருப்பெயர்கள்.

### கேள்விகள்

1. ஆலம் விதை எத்தகையது? இதனால் நாமறியும் நீதி யாது?
2. இளமையிற் செய்ய வேண்டுவன யாவை எனக் கவிராயர் கூறுகின்றார்?
3. சாகாத மனிதர் யாவர்?

---

## 2. நன்னெறி

### சினங்காக்க

1. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

### அன்பு அனைத்தினும் சிறந்தது

2. இல்லானுக் கன்பிங் கிடம்பொருளேவல் மற்றும்
எல்லா மிருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்!
மொழியிலார்க் கேது முதுநூல்? தெரியும்
விழியிலார்க் கேது? விளக்கு.

### இன்சொல் இயம்புதல்

3. இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலா லென்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்கா தழற்கதிரால் [தண்ணென்
கதிர்வரவால் பொங்குங் கடல்.

### பிறர் துன்பம் நீக்குக

4. பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய் !
மெய்சென்று தாக்கும் வியன்கோல்
அடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது.

### இனம் இனத்தோடு சேரும்

5. கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர் தாம்என்றும் மதியாரே—வெற்றி
நெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய்! வேண்டா
[புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்.
—சிவப்பிரகாசர்

### குறிப்புரை

**சிவப்பிரகாசர் :-** இவர் ஊர் - காஞ்சீபுரம். தந்தை - குமாரசாமி தேசிகர். மதம் - வீரசைவம். உடன் பிறப்பாளர் - கருணைப் பிரகாசர், வேலையர். ஆதரித்தவர்- அண்ணாமலை ரெட்டியார். சிவப்பிரகாசர் சுமார் 280 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்தவர். இயற்றிய நூல்கள் - நால்வர் நான்மணிமாலை, திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், சீகாளத்திப் புராணம் முதலியன.

**அருஞ்சொற்பொருள் :**

1. கவர்ந்து - தன்வயப்படுத்தி. ஓங்கு - வளர்கின்ற. தடுத்தல் - (கரை கட்டித்) தடுத்தல். தடம் - பெரிய. பேர்த்து - உடைத்து, விடுத்தல் - ( வெளியே செல்ல ) விடுத்தல்.

2. இங்கு - இவ்வுலகில். ஏவல் - வேலையாள். என் செய்யும் - யாது பயனைச் செய்யும் ? (ஒரு பயனுஞ் செய்யா) மற்று - அசை.

3. இருநீர் - பெரிய கடல் (சூழ்ந்த). வியன்-பரந்த. வன் சொல் - கடுஞ் சொல். அதிர் - ஒலிக்கின்ற. தண் என் கதிர் - குளிர்ச்சி பொருந்திய கிரணங்களையுடைய சந்திரன். அழல் கதிர் - வெம்மை பொருந்திய கிரணங்களையுடைய சூரியன்.

4. துயரம் - துன்பம். காக்க - (அவரைப்) பாதுகாக்க. விரைகுவார் - முற்படுவார். நேர் இழாய் - தகுதியாகிய ஆபரணம் அணிந்தவளே. வியன் - பெரிய. கடிது - விரைவு.

5. காமுறுவர் - விரும்புவர். வேண்டும் - விரும்பும். வாள் விழியாய் - ஒளி பொருந்திய கண்களையுடையவளே.

## கேள்விகள்

1. அணையிட்டுத் தடுத்தல் அரிதா ? உடைத்து விடல் அரிதா ? இதனால் நாமறிவது யாது ?
2. அன்பிலார்க்கு எவற்றாலும் பயனில்லை - ஏன் ? எவை போல ?
3. கடல் எப்போது பொங்கும் ? எப்போது பொங்காது ? இதிலிருந்து நீ அறிவது யாது ?
4. பெரியோர் இயல்பு யாது ? இதற்குக் கூறிய உவமை யாது ?
5. இனம் இனத்தோடு சேருமென்பதை விளக்கி எழுதுக.

---

## 3. திருக்குறள்

### கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு. (1)

### அறன் வலியுறுத்தல்

அறத்தினூங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு. (2)

### மக்கட்பேறு

மகன்தந்தைக்(கு) ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனும் சொல். (3)

### அன்புடைமை

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (4)

### விருந்தோம்பல்

இருந்தோம்பி இல்வாழ்வ(து) எல்லாம்விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. (5)

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்(று) அன்று (6)

### இனியவை கூறல்

முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம். (7)

### செய்ந்நன்றியறிதல்

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று. (8)

### நடுவு நிலைமை

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல்
அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி. (9)

### அடக்கம் உடைமை

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (10)

### ஒழுக்கம் உடைமை

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (11)

### பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. (12)

### அழுக்காறாமை

ஒழுக்காறுக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்(து)
அழுக்கா(று) இலாத இயல்பு. (13)

### புறங்கூறாமை

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. (14)

### தீவினையச்சம்

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (15)

### ஒப்புரவு அறிதல்

ஊருணி நீர்நிறைந்(து) அற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (16)

### ஈகை

நல்லா(று) எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. (17)

### புகழ்

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்ருமை நன்று. (18)

### வாய்மை

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும். (19)

### வெகுளாமை

தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். (20)

### இன்ஞ செய்யாமை

சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்ஞ
செய்யாமை மாசற்ருர் கோள். (21)

### இறை மாட்சி

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனுள் பவற்கு. (22)

### கல்வி

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. (23)

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு. (24)

### கல்லாமை

மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றுர் அனைத்திலர் பாடு. (25)

### கேள்வி

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. (26)

### அறிவுடைமை

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். (27)

### நாடு

பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. (28)

### நட்பு

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. (29)

### மானம்

தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. (30)

### பெருமை

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். (31)

### உழவு

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்(று) எல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். (32)

—திருவள்ளுவர்

## குறிப்புரை

திருக்குறள் = அழகிய குறள் வெண்பாவால் ஆகிய நூல் என்பதே இதன் பொருளாகும். "பொதுமறை" எனப் பெரும் புகழ் எய்திய இந்நூல் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்றாகும். இது அறத்துப்பால், பொருட்பால், இன்பத் துப்பால் என முப்பெரும் பிரிவுகளை உடையது. இந்நூல் 1330 குறட்பாக்களைக் கொண்டது. இந்நூலை இயற்றியவர் திருவள்ளுவர். இவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்; நூலறிவும், உலகியல் அறிவும், மதிநுட்பமும் வாய்ந்தவர். இவரைப்பற்றி உண்மையான வரலாறு அறியக் கூடவில்லை.

## அருஞ்சொற்பொருள்

1. முதல-முதன்மையாக உடையன. ஆதி-(எல்லாவற்றிற்கும்) முற்பட்ட. பகவன்-இறைவன்.
2. ஓங்கு-மிகுந்த. ஆக்கமும்-செல்வமும்.
3. ஆற்றும்-செய்யும். என்னோற்றான்-என்ன தவம் செய்தான்.
4. என்பும் - எலும்பினையும். உரியர் - உரிமையாக்குவார்கள்.
5. வேளாண்மை-உதவி. இருந்தோம்பி-வீட்டில் இருந்து பாதுகாத்து.
6. சாவா மருந்து-அமிழ்தம். வேண்டல்பாற்று-விரும்பும் தன்மை உடையது.
7. அமர்ந்து-விரும்பி.
8. நன்று-நல்லது.
9. சமன் செய்து-(முன்னே) சமமாக இருந்து. அணி-அழகாகும்.
10. அமரருள்-புகழ் உலகில், தேவரிடை, ஆரிருள்-கொடிய இருள் நிறைந்த நரகத்தில். உய்த்துவிடும்-செலுத்தி விடும்.

11. ஒழுக்கம் - நன்னடத்தை. ஓம்பப்படும் - பாதுகாக்கப் படும்.

12. அகழ்வாரை - தோண்டுகின்றவரை. தலை - சிறந்த குணமாம்.

13. அழுக்காறு - பொறாமை. இயல்பு - தன்மை.

14. ஏதிலார் - அயலார். மன்னும் - நிலைபெற்ற.

15. தீயினும் - நெருப்பைவிட.

16. அவாம் - விரும்பும். ஊருணி - ஊரார் நீர் உண்பதற்கு இடமான குளம்.

17. கொளல் - யாசித்தல். மேலுலகம் - வீட்டுலகம்; சுவர்க்கம்.

18. தோன்றில் - (மக்களாய்ப்) பிறந்தால். தோன்றாமை - பிறவாமை.

19. வாய்மையால் - உண்மை பேசுதலால்.

20. காவாக்கால் - (கோபம் வராமையைக்) காப்பாற்ற விட்டால்.

21. ஈனும் - அளிக்கும். இன்னா - துன்பம். கோள் - கொள்கை.

22. தூங்காமை - விரைவுடைமை.

23. கசடு அற - ஐயம், திரிபு என்னும் குற்றங்கள் நீங்க.

24. எண் - கணிதம். மொழி நூலறிவு.

25. பாடு அனைத்து - பெருமையின் அளவு.

26. செவி - கேள்வி. தலை - சிறந்ததாகும்.

27. என் உடையரேனும் - (அறிவு ஒழிந்த) எல்லாப் பொருள்களையும் உடையவராயினும்.

28. பிணி - நோய். இன்மை - இல்லாது இருத்தல். ஏமம்- பாதுகாவல்.

29. உடுக்கை - ஆடை. இடுக்கண் - துன்பம்,

30. மாந்தர் - மனிதர். இழிந்த - தாழ்ந்த. அனையர் - ஒப் பாவர்.

31. ஒக்கும் - ஒத்ததாகும்.

32. மற்று எல்லாம் - பிற தொழில் செய்பவரெல்லாம்.

## கேள்விகள்

1. உலகம் எவரை முதலாகவுடையது ? எது போல் ?
2. சிறந்த செல்வம் எது ? மிகுந்த துன்பம் தருவது எது ?
3. மக்கட் செல்வத்தின் பயன் என்ன ?
4. அன்புடையார், அன்பிலார் செயல்கள் யாவை ?
5. புதியதாக வந்த விருந்தினரைப் பேணும் முறை யாது ?
6. சிறந்த அறம் எது ?
7. மறத்தலாகாது-எதனை ? மறத்தல் வேண்டும்-எதனை ?
8. சான்றோர்க்கு அழகு யாது ?
9. அடக்கத்தையும், ஒழுக்கத்தையும் கைக்கொள்ள வேண்டும் - ஏன் ?
10. நிலத்தின்செயல் யாது ? அதனால் விளக்கப்படுவது யாது ?
11. ஒழுக்க நெறியாகக் கொள்ள வேண்டும் - எதனை ?
12. எது தீது ? எது நல்லது ?
13. மாசற்றார் கோள் யாது ?
14. நூற்களைக் கற்கும் முறை யாது ? கற்றபின் செய்ய வேண்டியது யாது ?
15. சிறந்த செல்வம் எது ?
16. எல்லாப் பொருளையும் பெற்றவர் யார் ? பெறாதார் யார் ?
17. நாட்டிற்கு அழகு அளிப்பன யாவை ?
18. நண்பனின் கடமை யாது ?
19. தலையின் இழிந்த மயிர் அனையர் யார் ?
20. தொழிலில் சிறந்தது எது ? எவ்வாறு ?

# IV. காதை

## 1. பஞ்ச தந்திரம்



### (அ) குரங்கும் குருவிகளும்

1. 'பாடுஉறு மூடனுக்குப்
பற்பல போதித் தாலும்
வீடுஉடையவனை வீட்டை
இழந்திடச் செய்வான்' என்று
'நேடுஉறு சன்மன் சொல்வான்'
நெடியது ஓர்பழு மரத்தில்
கூடுகொண் டனஇரண்டு
தூக்கணம் குருவி தாமே.

2. குளிரினல் நடுங்கி, வானக்
கொடுமழை யால் நனைந்து
நளிர்சுரத் தோடு தேகம்
நடுங்கியே பற்கள் கிட்டி,

வளம்அறு குரங்கு அங்கு
வந்ததைக் குருவி பார்த்தே,
இளகிய மனத்தி னாலே
இன்சொலால் ஒன்று சொல்லும்.

3. 'கைகள்கால் இருந்தும் இந்தக்
கன்மத்தை அனுபவிக்கும்
செய்திஎன்?'என்ன, "ஊசி
மூஞ்சிகொள் சிறிய மூடா!
வைதுநீ புத்தி சொல்ல
வல்லையோ?'' எனக் கோபித்து
நெய்திடும் அதன்தன் கூட்டை
நெடுங்கையால் பிய்த்தது அன்றே.

(ஆ) ஆகாயக் கோட்டை

1. மற்றொரு நகர்க்குச் செல்லும்
வழியில் ஓர் மணல்தடத்தில்,
சற்றொரு கணப்போது அங்கே
தரித்து அவணிருந்து நெஞ்சில்
உற்றகா ரியங்கள் கோடி
உன்னினன். 'இந்த மாவை
விற்றுநாம் ஆடு வாங்கி
மேய்க்கில் ஓரிரண்டு குட்டி

2. போடுமவ் விரண்டில் ஒன்று
பொருகடாத் தன்னைவிற்று
நாடுபெண் ஆடு இரண்டு
நயவிலை யாகக் கொள்வோம்.

ஆடுஒரு நாலாம் அந்த
 ஆடுகள் இரண்டு இரண்டாப்
போடுமக் குட்டி யோடே
 பொருந்திய பன்னிரண் டாமே.

3. பன்னிரண்டு ஆடும் விற்றுப்
 பசுக்கள் ஓரிரண்டு கொள்வோம்.
தன்னிலே பட்டி மேய்ந்து
 தருக்கியே இரண்டு ஈனும்.
மன்னுபால் நெய்யும் விற்று
 மற்றிரு பசுவும் கொள்வோம்
அன்னவப் பசுக்கள் ஆறும்
 ஆறு சேங்கன்று நல்கும்.

4. மூவணை ஏரும் பூட்டி
 முன்னுள நிலங்கள் எல்லாம்
ஓவற வளங்கள் ஆக
 உழுதுநாம் பயிர்கள் இட்டே
மேவு தானியங்கள் எல்லாம்
 விலைகளைக் குறைய விற்றுக்
காவலன் அறிக்கை யாலே
 கனக்கவோர் வீடு கட்டி

5. இருந்துநாம் பணமும் காசும்
 ஏரொடுபொருளும் தேடிப்
பொருந்திய இரவ லர்க்குப்
 போசனம் இடுவோம்; இட்டால்
வருந்தியே நமக்குப் பெண்ணும்
 வலியவே தருவர்; அந்தத்
திருந்திழை யாளும் நாமும்
 செருக்கியங் கிருக்கும் நாளில்.

6. அப்படி இருக்கும் நாளில்
அந்தியில் பசுக்கள் கட்டக்
கொப்படர் கண்ணுள் செல்லக்
குழந்தையு மழுநா மோடி
இப்படி அடிப்போம் அங்கே;
என்று ஒருதடி எடுத்துச்
செப்பிய பொரிமாத் தோண்டி
சிதறிட அடித்திட்டானே.

—வீரமார்த்தாண்ட தேவர்

## குறிப்புரை

**வீரமார்த்தாண்ட தேவர் :** இவர் பஞ்ச தந்திரக் கதைகளைப் பாடியவர்; சமீப காலத்தில் வாழ்ந்தவர். பஞ்ச தந்திரம் என்பது ஐவகை உபாயங்கள் என்று பொருள்படும் இந்நூலில் பல கதைகள் உள்ளன. இவை பல நீதிகளை விளக்கிச் சொல்கின்றன.

## அருஞ்சொற்பொருள்

(அ) 1. பாடு உறு-துன்பம் அடைகின்ற. நேடு உறு-(நல்) எண்ணம் பொருந்திய. பழுமரம்-ஆலமரம். சன்மன்-பிராமணன் சோமசன்மா என்பவர் ஓர் ஆசிரியர். இவர் பஞ்ச தந்திரக் கதைகளைப் பாடலிபுத்திர மன்னன் குமாரர்களுக்குச் சொன்னுர் என்பது வரலாறு.

2. நளிர் சுரம்-நடுங்கும் சுரம். வளம் அறு-மகிழ்ச்சியற்ற. இளகிய-இரக்கமுள்ள.

3. கன்மம்-துன்பம். நெய்திடும்-நெய்து கொண்டிருந்த. அதன் தன்-தூக்கணங் குருவியினுடைய.

(ஆ) 1. தடம்-வழி. கணம்-விநாடி. உன்னினன்-எண்ணினன். தரித்து-தங்கி. உற்ற-பொருந்திய. மாவை-பொரிமாவை. அவண்-அங்கு.

2. பொருகடா-போர் செய்யும் ஆட்டுக்கடா. நயவிலை-குறைந்த விலை.

3. நல்கும்-அளிக்கும். சேங்கன்று-காளைக்கன்று.

4. மூ அணை-மூன்று சோடி. ஓஅற-குற்றம் நீங்க. காவலன் அறிக்கையாலே-மன்னனது ஆணைப்படி. கனக்க-பெரிதான.

5. இரவலர்-வறியோர். போசனம்-உண்டி, உணவு. திருந்திழையாள்-பெண்.

6. அந்தி-மாலை நேரம். கொப்படர் கண்ணுள்-மனைவி. சிதறிட-நாலாப் பக்கமும் சிதறி ஓட.

## கேள்விகள்

1. எங்குக் குருவிகள் கூடு கட்டியிருந்தன ?
2. குரங்கு எந்நிலையில் குருவியிடம் வந்தது ?
3. குரங்கை நோக்கிக் குருவி கேட்டது யாது ?
4. குரங்கு பதில்கூறி, யாது செய்தது ?
5. இக்கதையால் நீ அறியும் நீதி யாது ?
6. பிரம்மசாரி கட்டிய மனக்கோட்டை யாது ?
7. "தோண்டி" உடையக் காரணம் என்ன ?
8. இக்கதையால் நீ அறியும் நீதி யாது ?

---

## 2. தேசிங்கு ராஜன் கதை



தேசிங்கும் குதிரையும்

தட்டின தட்டில் குதிரைக் கிளம்பித்
தரையில் நில்லாமல்
ஆகாய மார்க்கம் வந்து பாயுது
அந்த மேகக் குதிரை
சூரியன் போலே துலங்குது பார்
சொர்ண மேகக் குதிரை
கண்கண்ட தூரம் பார்த்து ராசர்கள்
கலங்கி நின்ருர்கள்

5. பாய்கிற குதிரையைக் கண்ணுல் கண்டு
பரதவித் திட்டார்கள்
மேகமண்டல மளாவி வருவதைப்
பார்த்தான் தேசிங்கு

லகாணை யிழுத்துச்சிமிட்டாக் கொடுத்தான்
ராசா தேசிங்கு
சிமிட்டா கொடுத்த வேகத்தாலே
சீறிப் பாயுது பார்
கோபம் வந்து மூண்டு கொண்டது
ராசாவுக் கானுலும்

10. காடு மலைகள் செடிகளெல்லாம்
கலங்கி நடுங்கிடவே
மலைக ளிடிந்து தவிடு பொடியாய்
மண்மேல் விழுந்திடவே
குன்று மலைகள் தாண்டிக் குதிரை
குதித்துப் போகுதாம்
குன்றுகளெல்லாம் பொடிப் பொடியாகக்
குலுங்கி விழுந்தன
குதிரை போகும் வேகத்தாலே
குன்று மலைகளெல்லாம்

15. குப்பென ஐங்காத வழியும்
கொண்டு போகிறதாம்
ஆறு குளங்கள் மடுக்களெல்லா
மதிர நடுங்குது பார்
ஐங்காத வழிக்கப்புற மிருக்கிறது
அந்த மேகக் குதிரை
குதிரை தட்டின வேகத்தாலே
குழந்தை தேசிங்கு
குலுங்க நகைத்துச் சிமிட்டாக்
கொடுத்தான் குதிரைக் கானுலும்

20. நிமிஷ நாழிகைக்கு ஐந்நூறு காதம்
நிலையாய்ப் பறக்குது
ஊரைச் சேர்ந்த காடு மலைகள்
ஒதுங்கி நடுங்குது பார்
குன்றி லிருக்கும் சிங்கம் யானை
குலுங்க நடுங்குது பார்

தேசத்தி லிருக்கும் சனங்க ளெல்லாம்
திரண்டு நடுங்குது பார்
ஐந்நூறு காதம் பஞ்சப் புரவி
ஆகாயம் போகுது பார்

25. அசுவம் போகும் வேகத் தாலே
யலையுது உலகமெல்லாம்
மேகம் கிளம்பி வாயைத் திறந்து
மின்னல் கக்குது பார்
மின்னல் வெளிச்சந் தன்னிற் பாயுது
மேகமான குதிரை
தேவர்க ளெல்லாம் மனது பயந்து
திகைத்திருந் தார்கள்
இந்த விடத்தை விட்டே யவர்க
ளிறங்கி யோடிவிட்டார்

30. உயர்ந்தம ண்டலம் போட்டேயவர்கள்
ஒதுங்கி யோடினர்கள்
வடக்கே வெகுதூரம் மகமேரு சாரல்
வந்து பாய்ந்ததுவே
குதிரை போகும் வேகத்தாற் பூமி
குலுங்கி நடுங்குது பார்
பர்வதங்கள் படபட வென்று
பதறி நடுங்குது பார்
அங்கி ருந்தே குதிரையைத் திருப்பின
னந்தப் பாலகனும்

35. தெற்கு மைநாக பர்வ தத்தைத்
தேடி யோடுது பார்
இலங்கையை நான்கு சுற்றுகத்தா
னடத்திக் கொண்டு வாரான்
பூமியி லுள்ள ஜந்துக ளெல்லாம்
பொறி கலங்குது பார்

வானத்தி லிருக்கும் மேக பந்திகள்
மதிமயங் குதுபார்
மேற்கு வெகு தூரங் கிளம்பி
மேலண்டை கொண்டு வாரான்
ஐந்து நாளு மிராப்பகலாக
யதிரவே கொண்டு வாரான்

## குறிப்புரை

புகழேந்திப் புலவர் தேசிங்கு ராஜன் கதை என்னும் இந் நூலை இயற்றியதாகக் காணப்படுகின்றது. இந்நூலின் நடையையும் அவரது பிற நூல்களையும் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து அஃது உண்மையோ என்னும் ஐயம் உண்டாகின்றது. இந் நூல் நாட்டுப் பாடல்கள் என்னும் ஒருவகையைச் சேர்ந்தது என்னலாம். இதில் கொச்சை வார்த்தைகள் பல மலிந்து கிடக்கின்றன. ஆனாலும் இந்நூலின் ஓசை நயம், படிப்போர்க்கும் கேட்போர்க்கும் இன்பம் பயக்கும் முறையில் அமைந்துள்ளது.

## அருஞ்சொற்பொருள்

துலங்குது-விளங்குகிறது. சொர்ணம் -பொன். காதம்-10 மைல். பஞ்சப்புரவி - பஞ்சவர்ணக் குதிரை. அசுவம் - குதிரை. பர்வதங்கள் - மலைகள். மைநாகபர்வதம்-ஒரு மலை. பந்தி - கூட்டம். கலங்கி-குழம்பி; அஞ்சி. அளாவி-துழாவி. சீறி - கோபித்து. குன்று - சிறு மலை. மடு-நீர் நிலை.

## கேள்விகள்

1. குதிரை எவ்வாறு கிளம்பியது ?
2. முதன் முறை சிமிட்டாக் கொடுத்ததும் குதிரை எவ்வாறு சென்றது ?
3. இரண்டாம் முறை சிமிட்டாக் கொடுத்ததும் யாது நிகழ்ந்தது ?
4. குதிரை வடக்கு நோக்கி ஓடியபோது நிகழ்ந்தது யாது ?
5. குதிரை தெற்கு நோக்கி ஓடியபோது நிகழ்ந்தது யாது ?

# V. பல்சுவை

## விண்மீன்

(1) வானத்து நீலப் பட்டாடை—அதில்
வாரி இறைத்த முத்துக்கள்
மேனி சிலிர்த்திடும் கண்டால்—அவை
விண்மீன்கள் என்று சொல்வார்கள்.

(2) மீன் என்று சொல்லுவ தேனோ?—அவை
மின்னிடும் காரணம்—தானோ?
நீர்நிலை மீன்கள் நம்மீன்கள்—அவை
நீல வானக்கடல் மீன்கள்.

—பாரதிதாசன்

## நூல்

நிலம் வளி தீநீர் வானம்
நிலவிய உலகில் உள்ள
பலபொருள் பொருளின் ஆக்கம்
பொறியினுல் பகுத்தா ராய்ந்து
விலக்குதல் விலக்கி மக்கள்
விலக்காத மேன்மை ஒன்றே
உலகினுக் களித்த ஆன்றோர்
உள்ளமே உயர்நூ லாகும்!

—வாணிதாசன்

## மழைக் குறிகள்

ஆற்று வெள்ளம் நாளைவரத் தோற்றுதேகுறி-மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழமின்னுதே
நேற்றுமின்று கொம்பு சுற்றிக் காற்றடிக்குதே-கேணி
நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே.

சேற்றுநண்டு சேற்றைக்கிள்ளி ஏற்றடைக்குதே—
தேடியொரு கோடிவானம் பாடியாடுதே [மழை
போற்றுதிரு மாலழகர்க் கேற்றமாம்பண்ணைச்-சேரி
புள்ளிப் பள்ளர் ஆடிப் பாடித் துள்ளிக்கொள்ளுமே.

—முக்கூடற்பள்ளு

ஏமாற்றம்

கல்லாத வொருவனைநான் கற்று யென்றேன்;
காடெறியும் மறவனைநா டாள்வா யென்றேன்;
பொல்லாத வொருவனைநான் நல்லா யென்றேன்;
போர்முகத்தை யறியானைப் புலியே யென்றேன்;
மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை;
வழங்காத கையனைநான் வள்ளா லென்றேன்;
இல்லாத சொன்னேனுக் கில்லை யென்றான்;
யானுமென்றன் குற்றத்தா லேகின் றேனே.

— இராமச்சந்திர கவிராயர்

**கைத்தொழில் காப்போம்**

கைத்தொழி லொன்றைக் கற்றுக்கொள்;
கவலை யுனக்கில்லை ஒத்துக்கொள்;
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருப்ப துனக்கே சரியாமோ?

உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் செல்லாது;
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுல கின்பமும் இருந்திடுமோ?

—நாமக்கல் இராமலிங்கம்

## இது என்ன?

மூவெழுத்துச் சொல்லிதுவே மூதூராகும்
மூவெழுத்துள் முதற்போக முரண்கொள் சீமான்
மூவெழுத்துள் இடைபோக முன்னர் மானே
மூவெழுத்துள் கடையிலதேல் மொழியும் கள்ளாய்.

—பாப்பிறையனூர்

## குறிப்புரை

பாரதிதாசன் வரலாற்றை வருணனைப் பகுதியில் காண்க.

அருஞ்சொற்பொருள் :- மேனி - உடல். சிலிர்த்தல் - மயிர்க் கூச்செறிதல்.

வாணிதாசன் தற்காலக் கவிஞர்களில் ஒருவர். பாரதி தாசனரின் அடிச் சுவட்டைப் பின்பற்றுபவர். பிரஞ்சு மொழிப் புலமையும் உடையவர். பல ஆண்டுகளாக நற் கவிதைகள் புனைந்து நாட்டு மக்கள் பாராட்டினைப் பெற்றவர். இப்பாடல் எழிலோவியம் என்ற அவர் தம் நூலிலிருந்து எடுக் கப்பட்டது.

அருஞ்சொற்பொருள் :-வளி-காற்று. பொறி - ஐம்பொறி கள். பகுத்து - பிரித்து.

பள்ளு : உழவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை வரு ணித்துக் கூறும் ஒரு வகைப் பாடல். இச்செய்யுள் முக்கூடல் பள்ளு என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது. முக்கூடல் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஓர் ஊர். இதன் ஆசிரி யர் என்னயினுப் புலவர்.

அருஞ்சொற்பொருள் : குறி-அடையாளம். ஏற்று-வளை வாய். ஏற்றம்-சிறப்பு. பண்ணை - வயல். ஈழ மின்னல் - தெற்கே மின்னும் மின்னல். நீர்ப்படு - நீர் வெளிப்படும்.

இராமச்சந்திர கவிராயர் வரலாற்றைப்பற்றி ஒன்றும் தெரிய வில்லை.

**அருஞ்சொற்பொருள்** :- எறியும் - வெட்டும். புலியேறு - ஆண் புலி. மல் - வலிமை. ஆரும் - நிறைந்த. சூம்பல் - வற்றுதல்.

**நாமக்கல் கவிஞர்** : இவர் நமது மாகாண முன்னாள் அரசவைக் கவிஞர். ஊர்-மோகனூர். தந்தை-வேங்கடராம பிள்ளை. இயற்றிய நூற்கள் - என் கதை, மலைக்கள்ளன், தமிழன் இதயம், அவளும் அவனும் முதலியன.

அருஞ்சொற்பொருள் :—விழவு - திருவிழா. ஒத்துக் கொள்-ஏற்றுக்கொள்.

பாப்பிறையனுர் : இவர் இந்நூலாசிரியர்களுள் ஒருவரான உயர்திரு. வித்துவான் S. நாகராசனுர் ஆவார்.

அருஞ்சொற்பொருள் :- மூதூர் - பழைய ஊர், மதுரை. இலதேல் - இல்லாவிட்டால். கள்ளாய் - கள். ஆய்-ஆய் என்பது அசை. மரை - மான்.

மதுரை என்பதில் முதல் எழுத்து எடுபடின் துரை என்ருகும். இடையெழுத்து எடுபடின் மரை என்ருகும். கடை எழுத்து எடுபடின் மது என்ருகும்.

## கேள்விகள்

1. மீன் என்னும் பெயர் வரக் காரணம் என்ன ? நீர் மீனுக்கும் விண் மீனுக்குமுள்ள வேறுபாடு யாது ?
2. உயர் நூல் என வாணிதாசனுர் குறிப்பிடுவது எதனை ? ஏன் ?
3. மழை வரும் அறிகுறிகள் யாவை ?
4. புலவர் செய்த குற்றம் யாது ? அதனுல் விளைந்தது யாது ?
5. கைத்தொழிற் சிறப்பு யாது ?
6. மதுரை என்னும் சொல், முதலிடை கடை எழுத்துக்களை விடுப்பதால், என்னென்ன பொருள்களைத் தரும் ?



# Valluvar Tamil Vachakam

For Standard VI

By

Vidwan: S. NAGARAJAN, M.A., L.T.,
(St. Mary's Training & High School for Women, Salem.)

AND

Vidwan: N SUNDARARAJAN,
(Senior Tamil Pandit, St. Michael High School, Coimbatore.)

PUBLISHED BY:

SIVALINGAM PUBLISHING HOUSE,
EDUCATIONAL PUBLISHERS
ERODE.

 1957 Price As. 12